# ஒப்பற்ற வெள்ளைவெளேர்-சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்...

## ஒப்பற்ற வெள்ளைவெளேர்!




அதி உன்னதமான துலக்கும் சக்தி படைத்தது
ஸூப்பர் ஸர்ஃப், கண்மறைவான அழுக்கையும்
அகற்றிவிடுகிறது. பிறர் பொறாமைப்படும்
அளவுக்கு அதி உன்னதமான வெண்மை
அளிக்கிறது உங்கள் துணிகளுக்கு.
அதிசயமென்ன, இந்தியாவின் தலைசிறந்த ரகமாக
விளங்குகிறது ஸூப்பர் ஸர்ஃப்!

---

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

இன்றைய ஜெம்ஷெட்பூர் என்னும் எ·கு நகரத்தை, துச்சமான முயற்சி யாகக் கருதியவர்களிடையே இவர் கற்பனை செய்து, உருவாக்கினார்.

முன்னேற்றத்திற்கான வழி அறியாது இந்தியா உழன்று கொண்டிருந்த சமயத்தில் இவர் பெங்களூரில் இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆ·ப் ஸையன்ஸ் என்னும் ஸ்தாபனத்தை நிறுவினார். தேசத்தின் விஞ்ஞான அறிவுத் துறையில் அதிகளின கண்டு பிடிப்புகளை இந்த இன்ஸ்டிட்யூட் அளித்துள்ளது.

இத்தகைய மன உறுதி –
எதிலும் முன்னோடியாக விளங்க வேண்டுமென்ற மன உறுதியை ஆதாரமாகக் கொண்டவரையில், ஆண்டுகள் பல உருண்டோடினும் எங்கள் நிறுவனம் இளமை குன்றாது விளங்கும்.

நாங்கள் வளருகிறோம். ஆனால் அது காலத்தை அனுசரித்த வளர்ச்சியாகும்.

ஜெம்ஷெட்ஜி நஸ்ஸர்வான்ஜி டாடா
பிறப்பு, மார்ச் 3, 1839

# எ·கினை யொத்த மன உறுதி





டாடா ஸ்டீல்

HT-TIS-8467A

# கல்கி

ஆனந்த பங்குனி 9
மார்ச் 23, 1975




''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.

சின்ன பொம்மைகள்;
சிங்கார வண்ணங்கள்
வனைக்கர வனிதையின்
விளங்கும் எழில் கலைகள்.

மேலட்டை வண்ணப் படம்: தூரலிங்கம்.

## அடுத்த இதழில்:

### ஒரு மனத்தின் பிரச்னைகள்



'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற வெ. ஜானகி எழுதிய சிறுகதை.

பாங்கான பொருள்களுக்குத் தேங்காய் நார்!





### தோசை விலை குறையுமா?

பேட்டிக் கட்டுரை

### தலைவர் தரிசனம்:

எம். கல்யாணசுந்தரம்
(வண்ணப் படத்துடன்)

# ஒவ்வொரு நாளும் உங்கள் சருமம் சிறிது ஈரப்பசை - யையும், சிறிது இளமையையும் இழக்கின்றது.



## புதிய ஜான்ஸன்ஸ்* பேபி லோஷன் ஒவ்வொரு நாளும் ஏற்படுகின்ற அந்த இழப்பை ஈடுசெய்கின்றது.

ஒரு பெண்மணியின் விலையில்லாப் பொக்கிஷம் அவளது சருமம். எனினும், வயதாக ஆக, அதை அழகாகவே வைப்பது கடினமாகும். வருங்காலத்தில் உங்கள் சருமத்தை அழகாக வைக்கவேண்டுமானால், அதை இன்று முதலே நன்று பராமரிக்கவேண்டும். ஆகையால்தான் உங்களுக்குத் தேவை புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன். இந்த விசேஷ அழகு லோஷன் சருமத்திற்கு இன்றியமையாத ஈரப் பசையை நிலை நிறுத்துகிறது.

அதோடு, கடுமையான குளிர் மாதங்களில் உங்கள் சருமத்தை மிருதுவாகவும், இளமையுடனும், அழகொளி வீசும்படியும் வைக்கிறது— ஆண்டு முழுவதும் கூட. எனவே, ஒவ்வொரு காலையிலும் இரவிலும் புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன் உபயோகியுங்கள். உங்கள் முகம், கழுத்து மற்றும் கைகளில் உபயோகித்து, உங்கள் சருமத்திற்குப் பனிபோன்ற புதுமையை அளித்திடுங்கள்.




## புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன்

## உங்கள் சருமத்தை மிருதுவாக, இளமை தவழ, அழகொளி வீச வைக்கின்றது.

# ஏற்கத்தக்க ஏழு!

இயக்கம், புரட்சி, போராட்டம் என்றெல்லாம் நடத்தினால் தான் எதிர்த்தரப்பு வாதங்களை அரசு கவனிக்கும். இல்லாமற்போனால் எதையும் காதில் போட்டுக் கொள்ளாமல் யதேச்சாதிகாரப் போக்கில் செல்லும் என்ற நிலை பாரதத்தில் தோன்றிவிட்டது, பரிதாபம். இது காரணமாகவே ஜெயப்பிரகாசர் மக்கள் இயக்கம் ஒன்றினை ஆரம்பிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அண்மையில் புது தில்லியில் அவர் தலைமை தாங்கி நடத்திச் சென்ற ஊர்வலம் மாபெரும் வெற்றியாக அமைந்தது. இந்த ஊர்வலம் பிசுபிசுத்துப் போகுமாறு செய்ய இந்திரா காங்கிரஸ் ஆட்சி அதிகார பலத்தைப் பிரயோகித்து என்னென்னவோ செய்து பார்த்தது. ஜம்பம் சாயவில்லை. பஸ் பர்மிட்டுகள் மறுக்கப்பட்டன. ரயில்களை நிறுத்திப் போலீஸார் டிக்கட் இல்லாப் பயணிகளைச் சோதிப்பதாகக் கூறித் தொல்லை கொடுத்தனர். இன்னும் ஏதேதோ அற்பத்தனங்கள். ஒன்றும் பலிக்கவில்லை. இந்திரா காங்கிரஸ் ஆட்சி தனக்குத் தானே கரியைப் பூசிக் கொண்டதுதான் மிச்சம். ஊர்வலம் ஜாம் ஜாம் என்று நடந்தது. சாமானிய ஊர்வலமா? பதினைந்து லட்சம் மக்கள் கலந்து கொண்டனர். இதில் நம்பிக்கை கொள்ளாதவர்கள் ஊர்வலத்தின் ஒரு வரிசையில் முப்பது முதல் நாற்பது பேர் வரை இருந்தனர் என்பதையும் குறிப்பிட்ட ஓரிடத்தை ஊர்வலம் கடந்து செல்ல 110 நிமிஷங்கள் ஆயின என்பதையும் எண்ணிப் பார்க்கட்டும்.

கல்கி

மலர் 34

இதழ் 34

ஜெயப்பிரகாசர் சமர்ப்பித்த கோரிக்கைகள் பின்வருமாறு: லஞ்ச ஊழலற்ற தூய ஆட்சி தேவை. காந்தீய அடிப்படையில் திட்டங்கள் வகுக்கப்பட வேண்டும். பீகாரிலும் குஜராத்திலும் மறுதேர்தல்கள் நடக்க வேண்டும். அவசர காலச் சட்டம், 'மீஸா' போன்ற மக்கள் உரிமைகளைப் பறிக்கும் சட்டங்கள் நீக்கப்பட வேண்டும். தேர்தல் முறையிலும் கல்வித் திட்டத்திலும் சீர்திருத்தங்கள் வேண்டும். அதிகாரம் மத்தியில் அபரிமிதமாய்க் குவிவது தவிர்க்கப்பட வேண்டும். மக்களின் சமூக, பொருளாதார உரிமைகளுக்கு உத்தரவாதம் தேவை.



ஜனசங்கமும் பாரதீய லோக தளமும் ஒத்துழைத்துப் புது தில்லியில் ஜெயப்பிரகாசரின் ஊர்வலம் வெற்றிபெறச் செய்த அதே சமயத்தில் ஆமதாபாதில் ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் மொரார்ஜி தேசாய் ஓர் ஊர்வலத்துக்குத் தலைமை தாங்கி நடத்திச் சென்றார். குஜராத்தில் மறுதேர்தல்களை நடத்துவதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே போவதை மக்கள் கண்டிக்கின்றனர் என்பதை அந்த ஊர்வலம் தெளிவாகவே எடுத்துக் காட்டியது.

எதிர்க் கட்சிகள் தங்கள் சுயநலத்துக்காக ஜே. பி.யைப் பயன்படுத்திக் கொள்ளுகின்றன என்ற வாதத்தில் யாரும் மயங்கிவிடமாட்டார்கள். மாறாக உதிரியாக நின்ற எதிர்க் கட்சிகளை உருப்படியான திட்டத்தின் கீழ் ஒருங்கு இணைப்பதில் ஜே. பி. வெற்றி பெற்று வருகிறார் என்பதே மறுக்க முடியாத உண்மை.

ஜே. பி. யின் இயக்கத்தைக் கிண்டல் செய்பவர்கள் உதிரிக் கட்சிகளை இணைக்கப் பார்க்கிறார் என்கிறார்கள். இவர்கள் ஆட்சிக்கு வந்தால் நெல்லிக்காய் மூட்டையாக விளங்குவார்கள், ஒருவருடன் ஒருவர் மோதிக் கொள்வதிலேயே காலம் செல்லும்; உருப்படியாக ஏதும் சாதிக்க முடியாது, ஸ்திரமான ஆட்சி இராது என்றெல்லாம் கூறி ஒப்பாரி வைக்கிறார்கள். இது வீண் பயம்.

பல அம்சத் திட்டம்கூட வேண்டாம், நாட்டைப் பொருளாதாரச் சீர்கேட்டிலிருந்து காப்பது என்ற ஒரே ஒரு அம்சத்தில் எதிர்க்கட்சியினர் ஒற்றுமை கண்டால் போதும், அந்தக் கூட்டணியை இரு கரங்கள் நீட்டி வரவேற்கலாம் என்று ராஜாஜி முன்பு சொன்னார். இன்றோ ஏழு அதிமுக்கியமான அம்சங்களில் ஒற்றுமை கண்டுள்ள எதிர்க் கட்சிகளின் அணிக்குச் சீலத் திருவுருவான ஜெயப்பிரகாசர் தார்மீகத் தலைவராக விளங்குகிறார். இதனை வரவேற்று மகிழ்வதில் மக்களுக்குத் தயக்கம் ஏன் இருக்கப் போகிறது?

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்


சுதந்திர காஷ்மீர்
பார்த்துக்கொண்டே இருங்கள். இனி இந்த முருங்கை மரத்தில் ஏறமாட்டேன்!


மாநில சுயாட்சி கொடுத்துப் பாருங்களேன்!
வேலூர் ஆஸ்பத்திரி


நேற்று
இன்று
நாளை?

# பழி வாங்கும் படலம்!

வெறும் வாயை மெல்லும் அரசியல் வாதிகளுக்கு வேலூர் மருத்துவ மனை வேலை நிறுத்தம் அவலாகக் கிடைத்திருக்கிறது. போட்டி போட்டுக் கொண்டு குட்டை குழப்பி ஏற்கனவே கூடாத அளவில் நீடித்துவிட்ட வேலைநிறுத்தத்தை மேலும் தொடரச் செய்கிறார்கள். இடையில் சொல்லொணாத் துயரத்துக்கு ஆளாவோர் நோயாளிகளே.

பதினைந்து பேர்களை வேலைநீக்கம் செய்தது தொடர்பாக எழுந்த சச்சரவில் முதல்வர் கூறிய சமரச யோசனையை மருத்துவ மனை நிர்வாகம் ஏற்கவில்லை. இதனால் முதல்வர் கோபம் அடைந்திருக்கிறார் என்பதை வருகிற செய்திகள் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றன. மருத்துவ மனையின் இணை இயக்குனர் டாக்டர் மத்தாய் கைது செய்யப்பட்டிருக்கிறார். அதையொட்டி வேலூர் நகரம் ஹர்த்தாலே நடத்தி ஜாமீனில் அவரது விடுதலையைப் பெற நேர்ந்திருக்கிறது. இதுவே அளவுக்கு அதிகமாக அரசு இந்த வேலைநிறுத்தத்தில் தலையிடுகிறது என்ற எண்ணத்தை ஏற்படுத்தும்போது அடுத்து வந்த செய்திகள் நம்மைத் திகைக்கச் செய்து விடுகின்றன. பழி வாங்கும் உணர்ச்சி இந்த அளவுக்குச் செயல்பட முடியுமா என்று பிரமிக்கச் செய்கின்றன. வர்த்தக வரி விதிப்பிலிருந்து விலக்குப் பெற்றுள்ள மருத்துவ மனைக்கு 69–70ம் ஆண்டுக்காக ஐந்து லட்சம் ரூபாய் வரியாகவும் அபராதமாகவும் செலுத்த வேண்டும் என்று அறிவிப்பு வந்திருக்கிறது. ஐந்து வருஷங்களுக்கு முற்பட்ட கணக்கு பற்றித் திடீரென்று இன்று விழிப்புணர்ச்சி ஏற்பட்டதும் வரி விலக்குப் பெற்றுள்ள மருத்துவ மனைக்கு வரி விதிப்பு நோட்டீஸ் அனுப்பப்படுவதும் விந்தையிலும் விந்தை. போதாக் குறைக்கு வர்த்தக வரி விதிப்பு இலாக்காவினர் ஆஸ்பத்திரிக்குள் சோதனை போடுவதாகச் சொல்லிக் கொண்டு நுழைந்திருக்கிறார்கள்! அதோடு முடிந்ததா பழி வாங்கும் படலம்? இல்லை. வட ஆர்க்காடு போலீஸ் சூப்பரின்டென்டு ஆறு லட்சம் ரூபாய்க்கு 'பில்' அனுப்பி யிருக்கிறார் மருத்துவ மனை நிர்வாகத்துக்கு. போலீஸ் பாதுகாப்பு அளித்ததற்காக நிர்வாகம் அவ்வளவு தொகை கட்டணமாகச் செலுத்த வேண்டுமாம்! எப்படி இருக்கிறது கதை!

வேலூர் மருத்துவ மனை நிர்வாகம் கண்டிப்பும் கறாருமாக ஓரளவு இருப்பதால்தான் அங்கு ஒழுக்கமும் சுறுசுறுப்பும் நிலவுகிறது; நோயாளிகளுக்கு நல்ல கவனிப்பும் ஆற்றலுடன் கூடிய வைத்திய உதவியும் கிட்டுகிறது. பணியாளர்களுக்குப் பயம் போய்விட்டால் மற்ற அரசாங்க மருத்துவ மனைகளுக்கும் அதற்கும் வித்தியாசம் ஏதுமிராது.

நமது முதல்வர் எதையும் ஒரு தனிப்பட்ட கௌரவப் பிரச்னையாக எடுத்துக்கொள்ளும் மனப்பான்மை பெற்றிருப்பது நல்லதல்ல. இதனால் கோபமும், கோபம் ஏற்படும்போது அதிகார துஷ்பிரயோகமும் நிகழ்கின்றன.

## கடமை வீரர்

இதை எழுதும்போது திரு டி. எஸ். கிருஷ்ணா அவர்கள் மறைந்து ஐந்து நாட்களாகிவிட்டன. பல்வேறு டி. வி. எஸ். நிறுவனங்களில் பணியாற்றும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் ஒரு நெருங்கிய பந்துவை இழந்தது போல் வாய்க்கு வாய் அவரைப் பற்றிப் பேசி வருந்திக் கொண்டிருக்கிறார்கள்.

அறுபத்திநாலு வயதான அவர் ஓய்வு பெற விரும்பியதில் ஆச்சரியமில்லை. ''வருடாந்திரக் கணக்குகள் முடிகிறபோது — இந்த ஜூன் முப்பதுடன் — எனக்கு விடுதலை கொடுங்கள்; நான் பல்வேறு அலுவல்களை முன்னிட்டு உலகமெல்லாம் சுற்றி வந்துவிட்டேன். ஆனாலும் பிறந்த மண்ணை இன்னும் சரியாகத் தரிசிக்கவில்லை. பாரதம்

---

ராஜாஜி சிந்தனை

### செல்வத்தை அழிக்காதீர்!

ஜான் மில்டன் சொன்னார்: ''எங்கே சுதந்திரம் குடியிருக்கிறதோ அதுவே என் நாடு.'' மக்களின் சுதந்திரத்தைப் படிப்படியாக விழுங்கும் அரசு அந்த அளவுக்கு மக்களின் தேச பக்தியையும் விழுங்குகிறது. விவசாயி, வியாபாரி, தொழிலதிபர் ஆகியோரின் சம்பாத்தியம், லாபம் ஆகியவற்றை எந்த அளவுக்கு அரசு விழுங்குகிறதோ அந்த அளவுக்கு வேலை செய்வதில் உள்ள ஊக்கம் குறைகிறது. ஒரு நிலையை எட்டிய பிறகு மக்கள் கட்டாயப்படுத்தினால்தான் உழைப்பார்கள். கட்டாயப்படுத்தினால் எந்த அளவுக்குத் தரத்தையும் உற்பத்தி அளவையும் எதிர்பார்க்கலாமோ அந்த அளவில்தான் உற்பத்தி இருக்கும். லாபத்திலும் சம்பாத்தியத்திலும் அரசு அளவுக்கு அதிகமாகக் கைவைக்கும்போது அரசு தேசத்தின் செல்வத்தை அழிக்கிறது. அதாவது மக்களின் உழைக்கும் ஆர்வம், ஆற்றல் என்கிற நாட்டின் உண்மையான மிகப் பெரிய செல்வத்தை அழிக்கிறது.

—சுயராஜ்யா, செப்டம்பர் 11, 1965



முழுதும் கவலையின்றிச் சுற்றிப் பார்த்து வர விரும்புகிறேன்'' என்று அவர் திரு ஆர். ரத்தினத்திடம் கூறியிருக்கிறார். ஆனால் கடமை வீரராகவே அவர் உயிர் துறக்க வேண்டும் என்பது கடவுளின் திருக்கருத்தாக இருந்திருக்கிறது.

திரு கிருஷ்ணனை நன்கு அறிந்தவர்கள் அவரை 'லயன் ஹார்ட்டட்' என்பார்கள். அத்தகைய அஞ்சா நெஞ்சத்தினரும் மனம் கலங்கிய தருணம் ஒன்று உண்டு. அது பஸ் போக்குவரத்து அரசுடைமையாக்கப்பட்டபோது. ஒரு குழந்தையைத் தாயார் கண்ணும் கருத்துமாக வளர்ப்பது போல் டி.வி.எஸ். பஸ் போக்குவரத்தைப் பேணி வளர்த்தவர் கிருஷ்ணா. காரில் நெடுஞ்சாலையோடு போகும்போது எதிரே டி.வி.எஸ். பஸ் வந்தால் நிறுத்திவிடுவார். டிரைவரை பானட்டைத் திறக்கச் சொல்லி இஞ்சினைச் சோதித்துப் பார்ப்பார். பயணிகளிடம் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு ஏதாவது குறை இருக்கிறதா என்று விசாரிப்பார். அலுவலகத்திலோ அன்றைய வசூல் எவ்வளவு என்று கேட்க மாட்டார்; புகார் ஏதாவது வந்ததா என்றுதான் விசாரிப்பார். டிரைவர்கள், கண்டக்டர்கள், இதர ஊழியர்களின் கூட்டம், அடிக்கடி நடத்தி அப்போதெல்லாம் ''உங்கள் எஜமானன் நான் அல்ல; பஸ் பயணிகளே! அதை மறவாதீர்கள்'' என்று அறிவுறுத்துவார்.

இன்றோ, அரசுடைமையான பஸ் போக்குவரத்தின் பொதுவான நிலவரம் யாவருக்கும் தெரிந்ததுதான். நெடுஞ்சாலையில் பஸ் பஞ்சர் ஆனால் டிரைவர் கண்டக்டர் கைவைக்க மாட்டார்கள்; ஸ்டெப்னி மாற்றக்கூட மெகானிக் ஒருவர்தான் ஊர் விட்டு ஊர் வர வேண்டும் என்ற நிலை நோக்கிச் செல்கிறது.

## உழைக்கும் உரிமை

சமூக நலத் திட்டங்கள் பலவற்றை நாங்கள்தான் வகுத்து வழிகாட்டினோம் என்று தமிழக அமைச்சர்கள் மார் தட்டிக் கொண்டிருந்தனர். இன்று மகாராஷ்டிர அரசு வகுத்துள்ள ஒரு திட்டம் தமிழக அரசின் எந்த ஒரு சமூக நலத் திட்டத்தையும் தூக்கி அடிப்பதாக இருக்கிறது.

வேலை செய்து சம்பாதிக்கும் உரிமையை அரசியல் சட்டம் அனைவருக்கும் வழங்குகிறது. ஆனால் வேலை கிடைத்தால்தானே? உங்களுக்கு வேலை உண்டு, உத்தரவாதம் தருகிறோம் என்கிறது மகாராஷ்டிர அரசு. இதற்கென பட்ஜெட்டில் நிதி ஒதுக்கியிருக்கிறது. இப்படி ஒதுக்கிய நிதியிலிருந்து கூலி கொடுத்து ஏதோ ஒரு வேலை செய்யச் சொன்னால் போதாது. செய்கிற வேலை நாட்டில் உற்பத்தி பெருகத் துணை புரிவதாக இருக்க வேண்டும். அந்தந்தப் பிரதேசத்தின் தனிப்பட்ட தேவைகளைப் பூர்த்தி செய்வதாகவும் இருக்க வேண்டும். பொருளாதாரம் நிலைப்பட உதவ வேண்டும். இல்லாத போனால் பஞ்ச நிவாரணம் வெள்ள நிவாரணம் என்று வாரி விட்ட தொகைகள் பணவீக்கத்தை அதிகரித்தது போல் இதுவும் பணவீக்கத்துக்கே துணை செய்யும். இதை உணர்ந்து விவசாயத்துக்கும் சிறு தொழில் பெருக்கத்துக்கும் கிராமப்புறங்களிலே வசதி செய்து வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்த மகாராஷ்டிர அரசு திட்டமிட்டிருக்கிறது. செயலாற்ற உறுதியும் தூய்மையும் மிக்க உள்ளங்கள் தேவை.

## காந்தீயச் செம்மல்

காமராஜ் அவர்கள் தமது சுற்றுப் பிரயாணத்தில் செல்லுமிடமெல்லாம் யதார்த்த நோக்கில் நல்ல யோசனைகளைக் கூறி வருகிறார். அரிசி பேர ஊழல் குறித்து விசாரணை நடத்த வேண்டும் என்றும் அமைச்சர் யாரேனும் இதனால் சிறைக்குப் போக நேர்ந்தாலும் பாதகமில்லை என்றும் ஓரிடத்தில் பேசியவர் மற்றோர் இடத்தில் அரிசி இறக்குமதி செய்தேனும் மக்களுக்குக் கஷ்ட நிவாரணம் அளிக்க வேண்டும்; இதன் முக்கியத்துவத்தை மத்திய அரசுக்கு உணர்த்தத் தமிழக அரசுடன் நான் ஒத்துழைக்கத் தயார் என்று கூறியுள்ளார். பிறிதோர் இடத்தில் இப்போதுள்ள கஷ்டங்களுக்கு முன்னாள் காங்கிரஸ் ஆட்சியும் ஓரளவுக்குக் காரணம்தான்; ஏன் நானும் கூடக் காரணம்தான் என்று மனம் விட்டுச் சொல்கிறார்.

இவையெல்லாம் காமராஜ் அவர்களின் விருப்பு வெறுப்பற்ற தூய உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டுவன. காந்தீயச் செம்மலின் தலைமையில் லஞ்ச ஊழல்களும் பஞ்ச நிலவரங்களும் மறைந்து நல்லாட்சியும் சுபிட்சமும் நிலவும் நாளைத் தமிழகம் ஆவலுடன் எதிர்பார்க்கிறது.

## அகாதெமிக்குத் தெ. பொ. மீ.

சாகித்ய அகாதெமி திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரம் அவர்களை அதன் சிறப்பு உறுப்பினராகத் (ஃபெல்லோ) தேர்ந்தெடுத்துக் கௌரவித்துள்ளது.

பாரதத்தின் அறிஞர்களில் இருபத்தொரு பேர்களுக்கே இந்தக் கௌரவம் கிட்டியுள்ளது. எட்டு ஆண்டுகளுக்கு முன்பு டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களுக்கும் அடுத்த ஆண்டு ராஜாஜிக்கும் கிடைத்த சிறப்பு இப்போது திரு தெ. பொ. மீ.க்குக் கிடைத்துள்ளது.



மதுரைப் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தராக விளங்கிய தெ. பொ. மீ. அவர்கள் மொழியியல் துறையில் உலகப் பேரறிஞர்களிடையே மதிக்கப் பெறுபவர். பாரதத்தின் இலக்கியக் கழகமாம் சாகித்ய அகாதெமி தக்கவர் ஒருவரைக் கௌரவித்துத் தனக்கும் பெருமை சேர்த்துக் கொண்டது.

# முருகப் பெருமான் 2

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஜைனர்களில் படிப்பாளிகள் அதிகம். இலக்கியத்தில் அவர்களுக்கு விசேஷமான இடம் உண்டு. தமிழில் ஐம்பெருங் காப்பியங்களிலேயே ஜைன சம்பந்தம் அதிகம். காவிய ரஸம் நிரம்பி மிக உயர்ந்த நூல்களாக உள்ள 'சிந்தாமணி', 'வளையாபதி' எல்லாம் ஜைன நூல்கள்தாம். சம்ஸ்கிருதத்தை எடுத்துக் கொண்டாலும் அதில் பஞ்ச காவியங்கள் என்று ஐந்து பொதுவாக இருந்தாலும், அது தவிர ஜைனர்கள் தனியாகத் தங்கள் மத சம்பந்தமாக ஒரு பஞ்ச காவியம் வைத்திருக்கிறார்கள். இந்த அமர சிம்மனும் அநேக ஜைன மத புஸ்தகங்கள் எழுதினான். ஆனால் இன்று மிஞ்சியிருப்பது மத நூலாக இல்லாத இந்த அகராதி ஒன்றுதான் என்றால் ஆச்சரியமாக இருக்கும். இந்த ஒன்றாவது மிஞ்சியதற்குக் காரணம் ஜைனர்கள் பரம விரோதியாக நினைத்த நம் ஆதி சங்கரர்தான்.

ஆதி சங்கரர் பாரத தேசம் முழுவதும் சஞ்சாரம் பண்ணி, பர மதங்களைக் கண்டனம் செய்து, வைதிக மதத்தை ஸ்தாபித்தார் அல்லவா? இந்தத் திக்விஜயத்தில் அவர் அமர சிம்மனையும் சந்தித்தார். பகவத்பாதரின் கொள்கை, 'ஒரே ஒரு சத்தியம்தான் இருக்கிறது; அதுவே பலவிதமாகத் தெரிகிறது; அந்த ஒன்றிலேயே கரைந்து அதுவாகவே ஆகிவிட வேண்டும்' என்பது. பௌத்தர்கள் பொதுவாக எல்லாமே சூனியம் என்பார்கள். ஆதி ஆசாரியாளும், 'மாயையால்தான் ஒன்று பலவாகத் தெரிகிறது; இந்தப் பார்வை போனால் இது அத்தனையும் போய்விடும்' என்று சூனிய நிலையையே சொல்கிற மாதிரி தோன்றினாலும் அவர் முக்கியமாகச் சொன்னது 'இல்லாத (சூனிய) மாயை'யை அல்ல; இது போன பின் எப்போதும் நிலைத்து இருக்கிற அழிவே இல்லாத பூரணமாக ஒரே சத்தியம் இருக்கிறது' என்பதைத்தான் ஸ்தாபித்தார். பௌத்தம் சூனியத்தோடு நிற்கிறது. பூரணமாக ஒன்றே ஒன்று இருக்கிறது என்பது ஆசார்யாளுக்கு முக்கியம். ஒன்றும் இல்லை என்பது புத்தருக்கு முக்கியம். 'ஒன்று இருக்கவும் இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம்' (அஸ்தி – நாஸ்தி) என்பது ஜினருக்கு (மகா வீரருக்கு) முக்கியம்.

இப்படிப்பட்ட கொள்கையை உடைய ஜைனனான அமரசிம்மன் ஆசாரியாளிடம் வாதப் போருக்கு வரும்போது, ''நான் ஒரு திரைக்குப் பின்னாலிருந்துதான் உம் கேள்விகளுக்குப் பதில் சொல்வேன்'' என்றான்.

ஆசாரியாளும் இதில் உள்ள ரகசியத்தை ஆராய்ச்சி செய்து பார்க்காமல் ஒப்புக் கொண்டார். (தொடரும்)



# ஸோபர்ஸ்

கிரிக்கெட் பேச்சு அற்புதமான ஆல் ரவுண்டர்கள் பக்கம் திரும்பும்போது கேரி ஸோபர்ஸின் பெயர் அடிபடாமல் இராது. டபிள்யூ. ஜி. கிரேஸ், வில்ஃபிரெட் ரோட்ஸ், ஜியார்ஜ் ஹிர்ஸ்ட், கீத் மில்லர் ஆகியோரோடு சம நிலையில் வைத்து எண்ணத் தக்கவர் ஸோபர்ஸ். அதே சமயம், மேற்கிந்திய கிரிக்கெட் வீரரும் இடதுகை ஆட்டக்காரருமான ஸோபர்ஸை வேறு யாருடனும் சேர்த்து வைத்துப் பார்க்கக் கூடாது என்றும் அவருக்கு அலாதியான தனி இடம் தரப்பட வேண்டும் என்றும் கருதுவோரும் உண்டு. சர்வதேச கிரிக்கெட் அரங்கில் ஸோபர்ஸைப் போன்று ஒரு முழுமை பெற்ற ஆட்டக்காரர் தோன்றியதே இல்லை என்று இவர்கள் கூறுவர்.

ஸோபர்ஸ் இங்கிலாந்தின் கவுண்டி கிரிக்கெட்டில் இனி ஆடமாட்டார், கிரிக்கெட்டிலிருந்து அவர் கிட்டத்தட்ட ரிடையர் ஆனது போல்தான் என்ற செய்தி வந்தபோது அது பலருக்கு அளவற்ற வருத்தத்தைத் தந்தது. அவரது இயற்கையான எழில் துலங்கும் ஆட்டத்தை இனிக் காண முடியாதே என்ற ஏக்கம் வாட்டியது.

கார்ஃபீல்ட் ஸெயின்ட் ஆல்ப்ரன் ஸோபர்ஸ் என்ற முழுப் பெயரை உடைய இவர் வேறு எந்த ஓர் ஆட்டக்காரரையும் விட அதிகமாக டெஸ்ட் மாட்சுகளில் ரன்கள் எடுத்திருக்கிறார் எட்டாயிரத்துக்கும் மேல்! எந்த ஒரு மேற்கிந்திய கிரிக்கெட் வீரரையும் விட அதிகமாக டெஸ்ட் மாட்சுகளில் கலந்து கொண்டிருக்கிறார். டெஸ்ட் கிரிக்கெட்டில் ஓர் இன்னிங்ஸில் ஒருவர் எடுத்த மிக அதிகமான ரன்கள் என்று பார்த்தால் அந்தப் பெருமையும் ஸோபர்ஸையே சேரும் — பாகிஸ்தானுக்கு எதிராகக் கிங்ஸ்டனில் 365 நாட் அவுட்!

மேற்கிந்தியக் கோஷ்டிக்காக ஸோபர்ஸ் பதினெட்டு வயதாவதற்கு முன்பாகவே டெஸ்ட் கிரிக்கெட்டில் ஆடினார். அவருக்குக் கிரிக்கெட் தெய்வத்தின் வரப்பிரசாதம். தெய்வத்தை இதில் இழுக்க விரும்பாதவர்கள் இவரைப் பிறவி ஆட்டக்காரர் என வர்ணிக்கலாம். பத்தாவது வயதில் ஆட ஆரம்பித்தார். சொல்லிக் கொடுத்தவர் யாருமில்லை. எந்த நிபுணரும் இவர் ஆட்டத்துக்கு மெருகேற்றவில்லை. இளைஞராய் இருந்தபோது ஏகலைவனைப் போல் செயல்பட்டார். மும்மூர்த்திகளான வோரல், வீக்ஸ், வால்காட் மட்டுமின்றி ராம்தின், வாலன்டைன் ஆகியோரிடமிருந்தும் ஆட்டத்தைத் தாமாகவே ரசித்துக்கொண்டார்.

சர்வதேச அரங்கில் முதன் முதலாக அவர் அடியெடுத்து வைத்தது, 1954ல் ஜமைக்காவில். இங்கிலாந்துக்கு எதிராக ஐந்தாவது டெஸ்டில் அன்று இடது கை ஸ்லோ போலராக அறிமுகமானார். இங்கிலாந்து 414 ரன்கள் எடுத்தது. அந்த மாட்சில் ஸோபர்ஸின் சாதனை: 28.5 ஓவரில் 75 ரன்கள் கொடுத்து நாலு விக்கெட்!

1957ல் இங்கிலாந்து சென்றபோது மத்திய லங்காஷயர் லீக் அவரைப் பிடித்துப் போட்டது. புரொஃபஷனல் ஆட்டக்காரர் ஆனார். லங்காஷயர் கிளப்பில் வேகப் பந்து வீச்சின் மதிப்பை உணர்ந்தார். பிறகு இந்தியாவின் கடினமான 'பிச்'சுகளில் இடது கை சுக்கி, சைனாமேன் போன்ற பந்து வீச்சு நுணுக்கங்களைக் கையாண்டார்.

இதற்கிடையில் அவர் பாட்ஸ்மனாகப் பிரமாத வெற்றிகளைக் கண்டு கொண்டிருந்தார். 1959–60ல் இங்கிலாந்து கோஷ்டி



# ஒரு பெரு சித்திரம்

மைதானத்தை விட்டு வெளியே வந்துவிட்டால் ஸோபர்ஸ் ஒரு குஷிப் பேர்வழி. சதா மகிழ்ச்சி ததும்பத் தோற்றம் அளிப்பார். மேற்கிந்தியத் தீவுகளின் பார்படாஸ் பகுதியில் சாதாரண உழைப்பாளர் குடும்பத்தில் பிறந்தவரை அவருடைய இயற்கையான ஆட்ட எழில் மிக உயர் மட்டத்துக் கனவான்களுடன் பழக வேண்டிய நிலைக்குக் கொண்டு போயிற்று. பெவிலியன் டிரெஸ்ஸிங் ரூமில் இவரைக் கிண்டல் செய்தால் ஏற்பார், சிரிப்பார். தாமும் பதிலுக்குத் தமாஷ் பண்ணுவார். ஆனால் மைதானத்தில் வேடிக்கையெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். ஒரே கண்டிப்பும் கருரும்தான். ஆட்டத்தின் முடிவுதான் முக்கியம் என்ற கருத்துடன் சிந்தனையும் செயலும் ஒருமுகப்பட்டிருக்கும்.

மேற்கிந்தியத் தீவுக்கு வந்தபோது அவரது 'கவர் டிரைவ்'களும் 'ஹூக்'குகளும் இங்கிலாந்து பௌலர்களின் பந்துவீச்சைத் தவிடு பொடியாக்கின. இந்த ஐந்து டெஸ்டுகளிலும் அவர் எடுத்த மொத்த ரன்கள் 709!

1968ல் நாட்டிங்ஹாம்ஷயர் காப்டனானார். இங்கிலாந்தின் கவுண்டி கிரிக்கெட்டில் நாட்டிங்ஹாம்ஷயர் இவர் தலைமையில், 15வது இடத்திலிருந்து 4வது இடத்துக்கு ஒரே தாவலில் முன்னேறியது. அதற்கு முன் முப்பத்தாறு ஆண்டுகளில் நாட்டிங்ஹாம்ஷயர் அந்த ஸ்தானத்தை எட்டிப் பிடித்ததில்லை. பாட்டிங் சராசரியில் முதலாவதாக இருந்தார் ஸோபர்ஸ். பௌலிங்கில் இரண்டாவது இடம். காட்சுகள் பிடிப்பதிலோ, விக்கெட்கீப்பரைத் தவிர்த்து மற்ற எல்லாரையும் தோற்கடித்திருந்தார்!

அதே ஸீஸனில் அவர் மற்றோர் அற்புதத்தைச் சாதித்தார். கிளமார்கன் கோஷ்டியின் நாஷ் வீசிய ஓர் ஓவரின் ஆறு பந்துகளையும் ஆறு ஸிக்ஸர்களாக அடித்தார். அவற்றில் மூன்று மைதானத்துக்கு அப்பாலேயே போய்விட்டன!

இங்கிலாந்தின் இந்தக் கவுண்டி ஆட்டத் தொடரின் முடிவில் ஸோபர்ஸ் ரொம்பக் களைத்துப் போயிருந்தார். மனத்தாலும் சரீரத்தாலும் களைத்திருந்தார். ஓய்வு தேவைப் பட்டது என்றாலும் பெரும்பாலும் வாதானவர்களே நிரம்பியிருந்த மேற்கிந்திய கோஷ்டியை ஆஸ்திரேலியாவுக்கு அழைத்துப்போய், பாட்டிங், போலிங் இரண்டுக்கும் தாமே பெரும் பொறுப்பு ஏற்றுச் சோபித்தார்.



மண்டியிட்டிருக்கிறார் ஸோபர்ஸ். அரசி எலிஸபெத் வாளை அவர் தோள் மீது வைக்கிறார். பிறகு எழுவது ஸர் கார்ஃபீல்டு ஸோபர்ஸ்! ஸோபர்ஸ் 'நைட்' பட்டம் பெறுவதைப் பார்க்க இருபதாயிரம் ரசிகர்கள் கூடினர். அவர்களில் பிரின்ஸ் ஃபிலிப்பும் ஒருவர்!

அவரது சகாக்கள் பலர் அவர் ஆறாவது பாட்ஸ்மனாகப் போவதை விரும்பவில்லை. ஆனால் அதுவே அவருக்குப் பிடித்தமான நிலையாக இருந்தது. இன்னும் முன்னதாகவே அவர் மைதானத்துக்குள் செல்ல வேண்டும் என்றும், அப்படிப் போனால் இன்னும் நிறைய ரன்களை எடுத்து அவர் மேற்கிந்தியத் தீவு கோஷ்டிக்கு உதவலாம் என்றும் அவரது சகாக்கள் பலமுறை வற்புறுத்தினர். ஆனால் ஸோபர்ஸ் அவர்கள் பேச்சைக் கேட்பதில்லை. ஐந்து விக்கெட்டுகள் விழும் வரை ஆட்டத்தை உன்னிப்பாய்க் கவனிப்பார். பௌலர்களின் திறனை ஆராய்வார். ஆறாவது பாட்ஸ்மனாகச் செல்லும்போதே தமது கோஷ்டியின் நிலை என்ன என்பதைப் புரிந்து கொண்டு அதற்கு ஏற்பத் திட்டமிட்டு வெற்றி பெற ஆடுவார். இது அவரது சாணக்கியம்.

அந்த கால்ஃப் ஆட்டத்தைத்தான் இலேசாக எடுத்துக் கொள்வாரா? கிடையாது! ஒரு டெஸ்ட் கிரிக்கெட்டின்போது ஓய்வுநாளன்று இவர் முப்பத்தாறு குழிகள் கால்ஃப் ஆடியிருக்கிறார்! கால்ஃப் ஆட்டத்தில் புகழ் பெற்ற டேவிட் மார்ஷ், ஸோபர்ஸுடன் ஆடி அவர் திறமையை வியந்திருக்கிறார். கிரிக்கெட்டிலிருந்து ஓய்வுபெறும் ஸோபர்ஸ் இனி நிறைய கால்ஃப் ஆடுவார். ஆனால் இவரால் கிரிக்கெட்டும் பயன்பெறவிருக்கிறது. தமக்கு எத்தனையோ பெருமை தேடித் தந்த கிரிக்கெட்டுக்குத் தம்மால் ஆன தொண்டைச் செய்ய வேண்டும் என்பது ஸோபர்ஸின் எண்ணம். இது பல இளம் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குப் பேருதவியாக அமையும்.

கிரிக்கெட் அவர் வாழ்க்கையாகிவிட்டதால் ஸோபர்ஸுக்குப் பொழுதுபோக்கு குதிரைப் பந்தயமும் கால்ஃப் ஆடுவதும்.

**ஆலன் ஃபோர்டு எழுதிய கட்டுரையின் தமிழாக்கம்: குட்டிகிருஷ்ணன்.**



# பாரதத்தின் வாழ்த்து...

சங்கீத நாடக அகாடமியின் கௌரவ உறுப்பினராக ஏற்கப்பட்டுள்ள ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்கு அந்த உயர் மரியாதைக்குரிய சான்றிதழை ஜனாதிபதி பக்ருதீன் அலி அகமது வழங்குகிறார்.



# திருச்சியில் பாராட்டு

மக்களெல்லாம் விருது பெற்றதற்கு மகிழ்ச்சியும் வாழ்த்தும் தெரிவிக்கும் வகையில் திருச்சி மக்கள் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மிக்கு ஒரு பாராட்டு விழா நடத்தினர். இந்த விழாவின்போது (1) ஸ்ரீ சதாசிவம் தம்பதியினர் நாதஸ்வர இசையுடன் மேடைக்கு அழைத்துச் செல்லப்படுகின்றனர்.

(2) பாராட்டுக் குழு அமைப்பாளர் திரு ஆர். சுப்பராயன் வாழ்த்திதழை வாசித்து ஸ்ரீமதி எம். எஸ்.ஸுக்கு அளிக்கிறார்.

(3) விழாவுக்குப் பிறகு ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கச்சேரி அவையோரை ஆனந்த பரவசத்தில் ஆழ்த்தியது. முன் வரிசையில் விழாவுக்குத் தலைமை வகித்த திரு கே. எஸ். வெங்கடராமன் அருகில் ஸ்ரீ சதாசிவமும் ஸ்ரீ சுப்பராயனும் அமர்ந்திருக்கின்றனர்.

ஸ்ரீ கே. எஸ். வெங்கடராமன் தலைமையுரையில் ஸ்ரீமதி எம். எஸ்.ஸின் புகழுக்குக் காரணம் அவரது தியாக உணர்வே என்றார். அதோடு இசையுலகில் அவரது வெற்றிக்கான காரணத்தையும் விளக்கினார்: பக்தியைக் கடலாக்கி; தம் குரல் நயத்தைத் துடுப்பாக்கி; பொருட் தெளிவைப் பாய்மரமாக்கி, இசை எனும் நாவாயை ஸ்ரீமதி எம். எஸ். செலுத்துவதாகச் சொன்னார்.

முந்நாள் தமிழக உயர் நீதிமன்ற நீதிபதியின் இந்தத் தீர்ப்பு எவ்வளவு சரியானது என்பதை அன்றைய கச்சேரியே நிரூபித்தது.

ஸ்ரீமதி எம். எஸ். எஸ். அவர்களைப் பாராட்டும் இவ் விழாவினை வெகு விமரிசையாக நடத்துவதில் திருச்சி நகர டாக்டர் வி. கே. ரங்கநாதனும், பாராட்டு விழாக் குழு அமைப்பாளர் திரு ஆர். சுப்பராயனும் எடுத்துக் கொண்ட முயற்சிகளை ஸ்ரீமதி எம். எஸ்ஸின் ரசிகர்கள் மனமாரப் பாராட்டி மகிழ்ந்தனர்.





காயங்களால் தொற்றுநோய் பரவக்கூடும்



# புதிய பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்

பயன்படுத்தி அவற்றைப் பாதுகாருங்கள். காயங்களை விரைவில் ஆற்ற இப்போது மெர்க்கியூரோக்ரோம் மருந்து கலக்கப்பட்டுள்ளது.






உங்கள் குழந்தையின் வாழ்வில் தூசியும் அழுக்கும் எங்கும் இடம் பெறுகின்றன. ஆனால் அவை இடம் பெறக் கூடாத இடம் ஒன்று உண்டு — அதுதான் திறந்த காயம்.

எல்லா சிறிய வெட்டுக் காயங்கள், கீறல்கள் மற்றும் சிராய்ப்புகளை ஆற்றுவதற்கு புதிய பாண்டு-எய்ட்* டிரஸ்ஸிங் உபயோகியுங்கள். இப்போது அதில் மெர்க்கியூரோக்ரோம் மருந்து கலக்கப்பட்டுள்ளது. இந்த நிரூபணமான ஆன்டிசெப்டிக் மருந்து பிளவுபட்ட சருமத்திற்கு, இதமளித்து காயங்களை ஆற்ற உதவுகிறது.

தேர்ந்தெடுக்க: ஸ்டாண்டர்ட் ஸ்ட்ரிப்ஸ்: வெட்டுக் காயங்களுக்கும், சிராய்ப்புகளுக்கும். வாஷ் ஸ்ட்ரிப்ஸ்: பெரிய காயங்களுக்கு. ஜெயண்ட் ஸ்ட்ரிப்ஸ்: பெரிய புண்களுக்கு. ஸ்பாட்ஸ்: கொப்புளங்கள் மற்றும் முகப் பருக்களுக்கு. பாட்ச்சஸ்: கட்டுப் போடக் கூடிய இடங்களுக்கு. எல்லா வகைகளும் 5 எண்ணிக்கை கொண்ட ஸ்ட்ரிப்புகளில் கிடைக்கின்றன.

புதிய பாண்டு-எய்ட்*

பயன்படுத்தி முன்ஜாக்கிரதையுடன் இருங்கள்.

காயங்களைப் பாதுகாக்கவும் ஆற்றவும் நம்பகமான பெயர்

A Johnson & Johnson product

*TRADEMARK © J & J

OBM:43:4 TH

ஐம்பத்தோராம் அத்தியாயம்

## ஜயஸ்தம்பம்

**வா**தாபி நகருக்கு இரண்டு காத தூரம் கிழக்கே ஒரு குன்று இருந்தது. சுற்றிலும் காடு அடர்ந்த அந்தக் குன்றின் ஒரு பக்கத்துச் சரிவில் அடுத்தடுத்துக் குடைந்த குகைகள் இரண்டு இருந்தன. இரண்டு குகைகளும் குடையும் வேலை பூர்த்தியாகாமல் அரைகுறையாக விடப்பட்டிருந்தன.

# சிவகாமியின் சபதம்



பௌத்தர்களோ சமணர்களோ அந்தக் குகைகளைக் குடைய ஆரம்பித்திருக்க வேண்டும். அப்புறம் எந்தக் காரணத்தினாலோ வேலையை நடுவில் நிறுத்தி விட்டுப் போயிருக்க வேண்டும்.

## அமரர் கல்கி

குகைகளில் ஒன்றுக்குள்ளேயிருந்து சலசலவென்ற சத்தத்துடன் ஒரு சிற்றருவி வெளியே வந்து கொண்டிருந்தது. குகையின் வெளியில் அந்த அருவி அங்குமிங்கும் தவழ்ந்து விளையாடி முத்து நீர்த் துளிகளை வாரி இறைத்துவிட்டுக் கீழ் நோக்கிச் சென்று அடர்ந்த விருட்சங்களின் நிழலில் மறைந்தது.

இவ்வளவு அழகான இயற்கைக் காட்சியின் ரம்மியத்தைக் கெடுத்து அருவருப்பை உண்டு பண்ணக் கூடிய பொருள்கள் சில அருவியின் இருபுறத்துப் பாறைகளிலும் விருட்சங்களின் அடியிலும் காணப்பட்டன. அவை மனிதர்களின் மண்டை ஓடுகள், மாட்டுக் கொம்புகள் முதலிய காபாலிகர் கூட்டத்தின் சின்னங்களாகும். பாறைகள் சிலவற்றில் இரத்தக் கறை படிந்திருந்ததிலிருந்து அந்தப் பாறைகள் சமீபத்தில் பலி பீடங்களாக உபயோகப்பட்டிருக்கின்றன என்பது தெரிய வந்தது.

**மா**லை நேரத்து மஞ்சள் வெயிலினால் பச்சை மரங்களும் பசும் பொன் நிறம் பெற்றுத் திகழ்ந்த நேரத்தில், மேற்கூறிய குகைகளுக்குச் சற்றுத் தூரத்திலேயிருந்த ஒரு

மொட்டைப் பாறையில் நாலு பேர் உட்கார்ந்திருந்தார்கள். தொலை தூரம் பிரயாணம் செய்திருந்த காரணத்தினால் அவர்கள் பெரிதும் களைப்படைந்திருந்தார்கள். ஆடைகள் அழுக்கடைந்திருந்தன. தலையில் ரோமம் சடை விழுந்திருந்தது. மோவாய்க் கட்டையில் ரோமம் அடர்ந்திருந்தது. அவர்களுடைய இளம் பிராயத்துக்குப் பொருந்தாத சுருக்கங்கள் முகத்தில் காணப்பட்டன. கண்கள் குழி விழுந்து போயிருந்தன. ஆயினும் அந்தக் கண்களிலே ஓர் அசாதாரண ஒளி, — இணையில்லா மனோதைரியத்தையும், எடுத்த காரியத்தை நிறைவேற்றும் உறுதியையும் காட்டும் ஜீவசக்தி — பிரகாசித்தது.

குன்றின் உச்சியில் ஒரு மனிதன் நின்று நாற்புறமும் உற்று நோக்கிக் கொண்டிருந்தான். கீழே மொட்டைப் பாறையில் உட்கார்ந்திருந்தவர்கள், அடிக்கடி அவனை அண்ணாந்து நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று மேலே நின்ற மனிதன் குதூகலம் நிறைந்த குரலில், ''அதோ!'' என்றான். அந்தக் குரலிலிருந்தே அவன் நம் பழைய நண்பன் குண்டோதரன் என்பதை அறிந்து கொள்கிறோம்.



''அதோ!'' என்ற சத்தத்தைக் கேட்டதும் மொட்டைப் பாறையில் உட்கார்ந்திருந்த நால்வரின் முகங்களும் மலர்கின்றன. அவன் சுட்டிக் காட்டிய திக்கை அவர்கள் ஆவலுடன் உற்றுப் பார்க்கிறார்கள்.

மரங்கள் அடர்ந்த காட்டுக்குள்ளேயிருந்து ஒருவன் வருகிறான். அவன் வேறு யாருமில்லை. பல்லவ நாட்டு ஒற்றர் தலைவன் சத்ருக்னன்தான். மற்றவர்களைப் போல் அன்றிச் சத்ருக்னன் நன்றாக க்ஷவரம் செய்து கொண்டு சுத்தமான முகத்துடன் விளங்குகிறான். அதிலிருந்தே அவன் நகரத்துக்குப் போய் வருகிறான் என்று அறிந்து கொள்ளலாம்.

தோளிலே துணிப் பை தொங்க வந்த சத்ருக்னனை ஐந்து பேரும் சூழ்ந்து கொண்டார்கள். ''சத்ருக்னா! காயா? பழமா? சீக்கிரம் சொல்!'' என்றார்கள்.

''பழந்தான்'' என்று சொல்லிக் கொண்டே, சத்ருக்னன் தோளில் தொங்கிய பையை எடுத்து அவிழ்த்தான்.

அதிலிருந்த பழங்கள் கீழே விழுந்து உருண்டு ஓடின. அவற்றைப் பொறுக்குவதற்கு எல்லோரும் பட்ட அவசரத்திலிருந்து அவர்கள் எவ்வளவு நேரம் பசித்திருந்தார்கள் என்று தெரிய வந்தது.

பசித்ததோ, இல்லையோ, தரையில் விழுந்த பழங்களின் மேல் கவனம் செலுத்தாமல், சத்ருக்னன் என்ன சொல்லப் போகிறான் என்பதிலேயே கவனம் செலுத்திய ஒருவரும் அவர்களில் இருந்தார்.

அவர்தான் மாமல்லர் என்று சொல்ல வேண்டியதில்லை.

''சத்ருக்னா! பழம் என்கிறாயே? அப்படி என்றால் என்ன? சிவகாமியைப் பார்த்தாயா?'' என்று கேட்டார்.

''ஆம் பிரபு, பார்த்தேன்!'' என்று கூறி மறுபடியும் சத்ருக்னன் மௌனம் சாதித்தான்.

''ஏன் இப்படிப் பேசாமல் இருக்கிறாய்? மேலே சொல், சத்ருக்னா! எங்கே பார்த்தாய்? எந்த நிலையில் பார்த்தாய்?'' என்று மாமல்லர் கேட்டார்.

''பிரபு! சிவகாமி அம்மையைப் பார்த்தேன். சௌக்கியமாக இருக்



கிறார். கவலைக்கு ஒரு காரணமும் இல்லை. எங்கே பார்த்தேன், எப்படிப் பார்த்தேன் என்பதை விவரமாகச் சொல்ல வேண்டும். எல்லோரும் உட்காருங்கள், சொல்கிறேன்!'' என்றான் சத்ருக்னன்.

அவ்வண்ணமே அனைவரும் பாறை மீது உட்கார்ந்தார்கள். சத்ருக்னன் சொல்லத் தொடங்கினான்.

''நேற்று மாலை வளையல் வியாபாரியின் வேஷத்தில் வாதாபி நகருக்குள் பிரவேசித்தேன். கோட்டை வாசலுக்குள் பிரவேசிப்பதில் எவ்விதக் கஷ்டமும் இருக்கவில்லை. ஜனங்கள் தாராளமாய் நகருக்குள் வந்து கொண்டும், போய்க் கொண்டுமிருக்கிறார்கள். எந்த எதிரியின் படையெடுப்பையாவது எதிர்



பார்த்தால் அல்லவா கோட்டையில் கட்டுக் காவல் வைக்கப் போகிறார்கள்? வாதாபியின் வீரப் படைகள் எட்டுத் திசையும் சென்று திக்விஜயம் செய்து கொண்டிருக்கும் போது...''

அச்சமயம் சேனாதிபதி பரஞ்சோதி குறுக்கிட்டு, ''என்ன உளறுகிறாய், சத்ருக்னா! திக்விஜயமாவது, மண்ணாங்கட்டியாவது? தென்னாட்டுக்குச் சென்ற வாதாபிப் படைகள் தோற்றுத் திரும்பி ஓடி வந்திருக்கின்றன! வேங்கிக்குப் போன சளுக்க சைனியத்தின் பாடும் ஆபத்துத்தான் என்று தெரிகிறது. அப்படியிருக்க வாதாபிப் படைகளின் திக்விஜயமாவது?'' என்றார்.

சத்ருக்னன் பணிவுடன் கூறினான்: ''சேனாதிபதி! வாதாபிப் படைகளின் திக்விஜயம் என்று நான் கூறியது என்னுடைய சொந்த மொழியல்ல. வாதாபி நகரத்தின் பிரதான நாலு வீதிச் சந்திப்பிலே ஒரு நெடிதுயர்ந்த ஜயஸ்தம்பம் நாட்டியிருப்பதைப் பார்த்தேன். அந்த ஜயஸ்தம்பத்திலே பிராகிருத மொழியில் எழுதியிருக்கும் மொழிகளையும் படித்தேன். கிட்டத்தட்ட அதில் எழுதியிருப்பதை ஞாபகம் உள்ளவரை அப்படியே சொல்லிப் பார்க்கிறேன்.

''மகா இராஜாதிராஜ ராஜமார்த்தாண்ட ரணதுங்க சூர சளுக்க குலதிலக சப்த லோக தேவேந்திர புலிகேசிச் சக்கரவர்த்தி தென் திசையை நோக்கி விஜயம் செய்யப் புறப்பட்டுச் சென்று மகேந்திர பல்லவனை வடபெண்ணைக் கரையில் முறியடிக்க, மகேந்திரன் போரில் புறமுதுகிட்டு ஓடி காஞ்சிக் கோட்டைக்குள் பதுங்கிக் கொள்ள, புலிகேசிச் சக்கரவர்த்தி மேலும், தெற்கு நோக்கித் திக்விஜயம் கிளம்பிக் காவேரி நதிக்கு யானைப் பாலம் அமைத்துக் கடந்து, அங்கே சக்கரவர்த்தியிடம் அடைக்கலம் புகுவதற்குக் காத்திருந்த சேர சோழ களப்பாள பாண்டிய மன்னர்களின் சிரங்களில் தம் திருப்பாத கமலங்களை வைத்து அருள் புரிந்து, திரும்புங்காலையில், காஞ்சிக் கோட்டையைப் பலங்கொண்டு தாக்க, மகேந்திர பல்லவன் சரணாகதியடைந்து காப்பாற்ற வேண்டும் என்று காலில் விழுந்து கெஞ்ச, அவ்விதமே மகேந்திரனுக்கு அருள் புரிந்து அவனுடைய உபசாரங்களையும் காணிக்கைப் பொருள்களையும் ஏற்றுக் கொண்டு, தென்னாட்டின் திக்விஜயத்தைப் பூர்த்தி செய்து, ஜயபேரிகை முழக்கி, வெற்றிச் சங்கு ஊதி, வாதாபி நகரத்துக்குத் திரும்பி வந்தது சாலிவாகன சகாப்தம் நாளது ஆண்டு திங்கள் தேதி. கடல் சூழ்ந்த நில உலகம் உள்ள வரையில் இந்த வாதாபி நகரமும் இந்தத் திக்விஜய ஜயஸ்தம்பமும் சளுக்க சக்கரவர்த்தி குலமும் என்றென்றைக்கும் நின்று நீடித்துப் பெருகித் தழைத்து விளங்குவதாக!''

இவ்விதம் சத்ருக்னன் கூறி வந்ததைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள், ''என்ன பொய்? என்ன கர்வம்? அந்த ஸ்தம்பத்தை இடித்துத் தள்ளாமல் விடுவதில்லை!'' என்றெல்லாம் கூறினார்கள்.

சிறிது அவர்கள் இடம் கொடுத்ததும், சத்ருக்னன் மேலும் கூறினான்: ''பிரபு! அந்த ஜயஸ்தம்பத்தில் இவ்விதம் நான் படித்ததும் என்னை நான் மறந்துவிட்டேன். ஸ்தம்பத்தை நோக்கி ஓர் உதை விடலாம் என்று எண்ணிக் காலையும் தூக்கிவிட்டேன். கடவுள் அருளால் நல்ல சமயத்தில் எதற்காக

# அருமையான காபி ப்ரூ,
# அறிவில் சிறந்தவள் என் மனைவி

சுமார் நான்கு ரூபாய்க்கு 30 கப்புக்கு மேல் ஸ்ட்ராங் காபி தயாரிக்கலாம் என்கிறாள் என் மனைவி பத்மா. ப்ரூ மிகச்சிறந்தது. ஒவ்வொரு கப்பும் நல்ல ருசியுள்ளது.

**ஒவ்வொரு கப் ப்ரூவுக்கும் வறுத்து அரைத்த காபியின் விலையைவிட அதிகமில்லை**

எனக்கு நினைவு தெரிந்த நாளாக நான் காபித் தானேயே உபயோகித்து வருகிறேன்.

இப்பொழுது இன்ஸ்டன்ட் காபிகளில் ப்ரூ ஒன்றையே விரும்பி சாப்பிடுகிறேன். ஏனென்றால் ப்ரூவின் ருசி சிறந்த காபியின் ருசியேதான்.

ப்ரூ ஸ்ட்ராங்கானது, திடமானது, சிறந்த மணம் கொண்டது. அவசரத் தேவையின் போதோ எதிர்பாரா விருந்தினர் வரும் போதோ ப்ரூ ரொம்ப சௌகரியமாய் இருக்கிறது.

ப்ரூ–ஓர் அபாரமான கண்டுபிடிப்பு.

**ப்ரூ ருசி சிறந்த காபியின் ருசி**



கோடையில்—
சாதாரணமான சருமம்...
வாடிவிடும் வியர்க்குருவினால்..






நைஸில்*
கிளாக்ஸோ தயாரிப்பு

*டிரேட் மார்க்

காலையிலே குளித்தபின்...
மேனிமீது தூவித் தெளிப்பீர்
நைஸில் பவுடரை



**வேர்க்குரு என்றால்**
**வீசை என்ன விலை**
**என்று கேட்பீர்கள்!**

அபரிமிதமான வியர்வையினால் சருமத் துவாரங்கள் அடைபடும் போது, யாரும் வியர்க்குருவினால் அவதிப் படுவார்கள் என மருத்துவ ஆராய்ச்சிகள் காட்டுகின்றன, எரிச்சலும் அரிப்பும் ஏற்படுகின்றன; சருமம் பாதிக்கப் படுகிறது. இதனை எதிர்த்துப் போராடும் குளோர் பென்ஸின் மற்றும் போரிக் பவுடர் அடங்கியது நைஸில் 'ப்ளு' ஒன்றுதான்-அதோடு உங்கள் சருமத்திற்குப் பாதுகாப்புத் தரும் ஜிங்க் ஆக்ஸைடும் அதில் அடங்கியுள்ளது.

SISTA'S-GN-410-TAM B

வாதாபி நகருக்கு வந்தோம் என்பது ஞாபகம் வந்தது. ஏதோ கால் தடுக்கி விழுந்தவனைப் போல் தொப்பென்று கீழே விழுந்து சமாளித்துக் கொண்டேன். வீதியில் ஜனக் கூட்டம் 'ஜேஜே' என்றிருந்தது. யாராவது பார்த்திருந்தால் விபரீதமாய்ப் போயிருக்கும்!'' என்று கூறி நிறுத்தினான்.

''சத்ருக்னா! வாதாபிக்கு வந்த காரியம் உனக்கு நினைவில் இருந்தது பற்றிச் சந்தோஷம். ஆனால், அதைப் பற்றி இன்னமும் நீ சொல்லவில்லை!'' என்று மாமல்லர் கோபம் தொனிக்கக் கூறினார்.

''பிரபு! மன்னிக்க வேண்டும்! சளுக்கர்களின் பொய் சொல்லும் திறமைக்குச் சிறந்த ஞாபகச் சின்னமான அந்த ஜயஸ்தம்பத்தை விட்டு மேலே கிளம்பிச் சென்றேன். வாதாபி நகரின் மிதமிஞ்சிய ஐசுவரிய போகத்துக்கும் வாதாபி மக்களின் படாடோப வாழ்க்கைக்கும் பல அறிகுறிகளைப் பார்த்துக் கொண்டு போனேன். இந்தப் பெரிய நகரத்தில்,—கிழக்கு மேற்கிலும் தெற்கு வடக்கிலும் குறைந்தது காத தூரம் உள்ள இந்தப் பிரம்மாண்டமான பட்டணத்தில், — சிவகாமி அம்மையை எப்படித் தேடுவது, யாரை விசாரிப்பது என்று சிந்தனை செய்து கொண்டே போனேன். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல், அடுத்தாற் போல் வந்த நாற்சந்தி வீதி முனையில் அம்மையைச் சந்தித்தேன்.''

''என்ன? நாற்சந்தி முனையிலா?'' என்று பல குரல்கள் ஏக காலத்தில் எழுந்தன.

''ஆம்! நாற்சந்தி முனையிலேதான் பார்த்தேன். அம்மை அங்கே செய்து கொண்டிருந்த காரியத்தைக் கேட்டால் நீங்கள் பெரும் ஆச்சரியப்படுவீர்கள். எனக்கும் பார்த்தவுடனே ஆச்சரியமாயிருந்தது. வேதனையாகக்கூட இருந்தது. ஆனால், விசாரித்து விஷயம் தெரிந்து கொண்டதும் அளவிலாத பெருமை அடைந்தேன். பிரபு! தமிழகத்துப் பெண் குலத்தின் பெருமையைச் சிவகாமி அம்மை நிலைநாட்டிவிட்டார். நூறு காத தூரத்துக்கு அப்பால் எதிரிகளின் கோட்டையில் அநாதையாகவும் தன்னந்தனியாகவும் இருக்கும் நிலைமையில் அம்மையார் தமிழகத்துப் பெண் குலத்தின் தயாள குணத்தை நிலைநாட்டியிருக்கிறார்.''

''சத்ருக்னா! ஏன் இப்படி வளைத்து வளைத்துப் பேசிக் கொண்டிருக்கிறாய்? சிவகாமி என்ன காரியம் செய்து கொண்டிருந்ததைப் பார்த்தாய்?'' என்று மாமல்லர் கடுமையான குரலில் கேட்டார்.

''பிரபு! சொல்லி விடுகிறேன். வாதாபி நகரின் நாற்சந்தியில் சிவகாமி அம்மை நடனம் ஆடிக் கொண்டிருந்தார்!''

''ஆகா!'', ''இது என்ன?'', ''அவமானம்! அவமானம்!'', ''இதைத்தானா தமிழகத்துக்குப் பெருமை என்று சொன்னாய், சத்ருக்னா!'' என்று தலைக்குத் தலை கூவினார்கள்.

''மன்னிக்க வேண்டும், கொஞ்சம் பொறுத்துக் கொண்டு மீதியையும் கேளுங்கள். சிவகாமி அம்மை ஒரு பெரும் கும்பலுக்கு மத்தியில் நின்று



ஆடுவதைப் பார்த்ததும் எனக்குச் சொல்ல முடியாத அவமானம் உண்டாயிற்று. கோபமும் ஆத்திரமும் பொங்கிக் கொண்டு வந்தன. கூட்டத்தில் நின்ற வாதாபி மக்கள் கொச்சையான பாஷையில் பேசிக் கொண்ட அருவருப்பான வார்த்தைகளைக் கேட்டதும் காதுகள் கொப்புளித்தன; ஓடிப் பாய்ந்து அம்மையின் முன் சென்று, 'நிறுத்துங்கள் இந்த அவமானத்தை!' என்று கூற வேண்டும் என்பதாக ஆத்திரம் உண்டாயிற்று. நல்ல வேளையாக அந்தச் சமயத்தில், நடனமாடிய அம்மைக்குப் பின்னால் நின்றவர்கள் மீது என் பார்வை விழுந்தது. ஆகா! அதை எப்படிச் சொல்வேன்? தமிழகத்தைச் சேர்ந்த ஸ்திரீ, புருஷர்கள் பலரை அங்கே கையைப் பின்னால் சேர்த்துக் கட்டி நிறுத்தியிருந்தார்கள். அவர்

களுக்கிடையே கையில் சாட்டை பிடித்த யமகிங்கரர் போன்ற மனிதர்கள் சிலர் நின்று கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சியைக் கண்டதும் பிரமித்து நின்று விட்டேன். பிரமை நீங்கிய பிறகு கூட்டத்திலிருந்தவர்களின் பேச்சுக்களை ஒற்றுக் கேட்டும், சந்தேகம் தோன்றுதபடி விசாரித்தும், மேற்படி அதிசயக் காட்சியின் காரணத்தை நன்கறிந்து கொண்டேன்.''

பிறகு சத்ருக்னன் சிவகாமி அம்மை நாற்சந்தியில் நடனமாட நேர்ந்தது ஏன் என்னும் காரணத்தைத் தான் தெரிந்து கொண்டபடி அவர்களுக்குக் கூறினான்: ''தமிழகத்து ஆடவர் பெண்டிரைக் கொடுமையான சாட்டையடித் தண்டனையிலிருந்து காப்பாற்றுவதற்காகவே சிவகாமி நடனமாடுகிறாள்'' என்று தெரிந்ததும் மாமல்லர் முதலியவர்களுக்குத் தேகத்தில் புளகாங்கிதம் உண்டாயிற்று.

பிறகு மேலே நடந்ததைப் பற்றியும் ஆவலுடன் கேட்டார்கள்.

''இன்ப கானத்தைக் கேட்ட நாக சர்ப்பத்தைப் போல் நான் சிவகாமி அம்மையின் நடனத்தைப் பார்த்துக் கொண்டு பிரமித்து நின்றேன். அம்மை நடனத்தை முடித்துச் சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்டு திரும்பினார். திரும்பியதும் சில கண நேரம் அவருடைய கண்களில் சொல்ல முடியாத வியப்பும் திகைப்பும் காணப்பட்டன.

''அவர் பார்த்த திசையை நானும் நோக்கினேன். அங்கே யார் நின்றது என்று நினைக்கிறீர்கள்?''

''யார்? யார்?'', ''புலிகேசியா ?'' என்று கேள்விகள் எழுந்தன.

''இல்லை, நம் சிநேகிதர் நாகநந்தி தான்!'' என்றான் சத்ருக்னன்.

## ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்

# வளையற்காரன்

நாகநந்தி என்ற பெயரைக் கேட்டவுடனே அங்கிருந்தவர் அனைவருக்கும் தூக்கிவாரிப் போட்டது.

மாமல்லர், ''ஆஹா! புத்த பிக்ஷுவா? அப்படியானால் குண்டோதரன் கூறிய செய்தி பொய்யா?'' என்று சொல்லியவண்ணம் குண்டோதரனை நோக்கினார்.

''இல்லை பிரபு! குண்டோதரன் கூறிய செய்தி உண்மைதான். வாதாபிக்கு வரும் வழியில் பிக்ஷு வேங்கி நகரத்துக்குத்தான் போனார்.. துரதிருஷ்டவசமாக நேற்றுத் திரும்பி வந்து விட்டார். அவருடைய வரவினால் நம்முடைய காரியம் ஒன்றுக்குப் பத்து மடங்கு கடினமாகி விட்டது. இன்னும் இரண்டு நாளைக்கு முன்னால் மட்டும் நாம் வந்திருந்தால்...?'' என்றான் சத்ருக்னன்.

''பிக்ஷு நேற்றுத்தான் திரும்பி வந்தாரா? உனக்கு எப்படித் தெரியும், சத்ருக்னா!'' என்று சேனாபதி பரஞ்சோதி வினவினார்.

''நகரமெல்லாம் அதைப் பற்றித்தான் பேச்சு, தளபதி! ஜனங்கள் பேசிக் கொண்டதிலிருந்து தான் தெரிந்து கொண்டேன். புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் சென்ற வருஷம் வேங்கி மன்னனைக் முடிசூட்டிக் கொண்டானல்லவா? எந்த வேளையில் மகுடாபிஷேகம் செய்து கொண்டானோ தெரியவில்லை; சில நாளைக்கு முன்பு அவன் மாண்டு போனான். அவனுடைய மனைவியையும் ஆறு மாதத்துக் கைக் குழந்தையையும் அழைத்துக் கொண்டு நாகநந்தி நேற்றுத் திரும்பி வந்தாராம்'' என்று சத்ருக்னன் கூறினான்.

''சளுக்க சாம்ராஜ்யத்தின் அஸ்தமனம் நெருங்கி விட்டது' என்று பல்லவேந்திரர் கூறியது வீண் போகவில்லை. விஷ்ணுவர்த்தனன் எப்படி இறந்தானாம்?'' என்று பரஞ்சோதி கேட்டார்.

''விஷ்ணுவர்த்தனன் வேங்கிப்படைகளை முழுதும் நாசம் செய்ய முடியவில்லை. நம்முடைய சக்கரவர்த்தி சொல்லி அனுப்பியிருந்தபடி வேங்கிப் படைகள் பின்வாங்கிச் சென்று—கிருஷ்ணை கோதாவரி நதிக்கரைக் காடுகளில் ஒளிந்து கொண்டிருந்தன. —விஷ்ணுவர்த்தனன் முடி சூடிக்கொண்ட பிறகு நாடெங்கும் கலகங்கள் மூண்டன. ஒளிந்திருந்த படை வீரர்கள் அங்கங்கே திமுர் திமுரென்று கிளம்பித் தாக்கினார்கள். கலகத்தைத் தானே அடக்கப் போவதாக விருது கூறிக் கொண்டு விஷ்ணுவர்த்தனன் கிளம்பினான். ஒரு சண்டையில் படுகாயமடைந்து விழுந்தான். நாடெங்கும் கலகங்கள் அதிகமாயின. இந்தச் சமயத்தில்தான் நாகநந்தியும் அங்கே போய்ச் சேர்ந்தார். விஷ்ணுவின் மனைவியையும் குழந்தையையும் கொண்டு வந்து சேர்த்தார். விஷ்ணுவர்த்தனன் மனைவி துர்விநீதனுடைய மகள் என்பது தங்களுக்குத் தெரியுமல்லவா, பிரபு?''

ஏப்ரல் 13உ
சித்திரைச்
சிறப்பிதழில்
ஆரம்பம்:

"நான் நடந்ததை மறக்க வேண்டுமானால் எனக்கு நிறைய பணம் தேவை."

"என்னிடம் இப்போ பணமாக இல்லை. செக் தரட்டுமா?"

"செக்கை வாங்கிக்கொள்ள நான் என்ன முட்டாளா?"

"அப்படியானால் நாளைக் காலை வா, தருகிறேன்."

# தீவுகள்

இந்திரா பார்த்தசாரதி
எழுதும்
புதிய தொடர் கதை

"சரி, செக் கொடுங்கள். நாலைந்து பாங்குகளில் ஸெல்ஃப் செக்குகளாகக் கொடுங்கள்."

ரத்தன்லால் செக்குகளை வாங்கிக் கொண்டு போனான்.

வீட்டுக்குப் போக வேண்டும. வீட்டில் யார் இருப்பார்கள்? மோகினியைக் கொன்றவர் யார்?......

## கடைசிப் பக்கம்:

# கண்ணதாசன்

எழுதுகிறார்

''அதைப் பற்றியெல்லாம் இப்போது என்ன கவலை, சத்ருக்னா? நாம் வந்த காரியத்தைப் பற்றிச் சொல்லாமல் ஊர்க் கதையெல்லாம் சொல்லிக்கொண்டிருக்கிறாயே? மேலே நடந்ததைச் சொல்லு!'' என்றார் மாமல்லர்.

''நாகநந்தி பிக்ஷுவைப் பார்த்து வியப்பும் திகைப்பும் அடைந்த சிவகாமி அம்மை, சீக்கிரத்தில் சமாளித்துக் கொண்டு பல்லக்கில் போய் ஏறினார். பல்லக்கைச் சற்றுத் தூரம் நான் தொடர்ந்து சென்றேன். ஆரவாரமின்றி அமைதி குடிகொண்டிருந்த



ஒரு வீதிக்குள் பல்லக்குச் சென்று அழகான மாளிகை ஒன்றின் வாசலில் நின்றது. சிவகாமி அம்மை பல்லக்கிலிருந்து இறங்கி அந்த மாளிகைக்குள்ளே போனார். வீதி முனையிலேயே நான் கொஞ்ச நேரம் நின்று என்ன செய்யலாம் என்று யோசித்தேன். பிறகு மாளிகை வாசலை நெருங்கினேன். காவலாளிகள் இருவர் அங்கு இருந்தார்கள். அவர்களைப் பார்த்து, 'காஞ்சி நகரத்து நாட்டியப் பெண் இருப்பது இந்த வீட்டில்தானே?' என்று கேட்டேன். 'ஆமாம்; எதற்காகக் கேட்கிறாய்?' என்றார்கள். 'நான் வளைச் செட்டி; அழகான வளைகள் கொண்டு வந்திருக்கிறேன். அம்மையிடம் காட்ட வேண்டும்' என்றேன். 'இரவு நேரத்தில் இந்த வீட்டுக்குள் யாரும் புகுவதற்கு அநுமதியில்லை, நாளைப் பகலில் வா!' என்றார்கள். சற்று நேரம் அவர்களுடன் வம்பு பேசிப் பல விஷயங்கள் தெரிந்து கொண்டேன். சிவகாமி அம்மையும் ஒரு தோழியும் சமையற்காரியும் மட்டும் அந்த வீட்டுக்குள் இருப்பதாகவும், வேறு யாரும் இல்லை, வருவதுமில்லையென்பதாகவும் தெரிந்து கொண்டேன். ஒரே ஒரு தடவை புலிகேசி சக்கரவர்த்தி அங்கு வந்து இராஜ சபையில் நடனம் ஆடும்படி கேட்டாராம். அம்மை அதை மறுத்து விட்டபடியால் இம்மாதிரி வாதாபி வீதிகளில் தினம் நாட்டியமாடும்படி தண்டனை விதித்தாராம். இதை அறிந்ததும் எனக்குக் கோபம் கோபமாய் வந்தது. மனத்துக்குள்ளே அந்தக் கொடு மனம் படைத்த ராட்சதப் பதரைத் திட்டிக் கொண்டு திரும்பினேன். வீதி முனைக்குச் சென்றதும் ஒரு பக்கத்திலிருந்து தீவர்த்தி பிடித்த காவலர்கள் புடைசூழ ஒரு பல்லக்கு வருவதைக் கண்டேன். ஒரு வீட்டுத் திண்ணையில் தூணின் பின்னால் ஒளிந்து கொண்டு பல்லக்கில் வருவது யார் என்று கவனித்தேன். நான் எதிர்பார்த்தது போலவே நாகநந்தி பிக்ஷுதான் பல்லக்கில் இருந்தார்.''

அப்போது நறநறவென்று, மாமல்லர் பல்லைக் கடிக்கும் சத்தம் கேட்டது. சேனாதிபதி பரஞ்சோதி குறுக்கிட்டு, ''சத்ருக்னா! ஏன் கதையை வளர்த்திக் கொண்டே போகிறாய்? அம்மையைச் சந்தித்துப் பேசினாயா? ஏதாவது செய்தி உண்டா? அதைச் சொல்லு!'' என்றார்.

பரஞ்சோதியைச் சிறிது கோபமாக மாமல்லர் பார்த்துவிட்டு, ''சத்ருக்னா! எதையும் விடவேண்டாம்; நாகநந்தி எங்கே போனார்? சிவகாமியின் வீட்டுக்குள்ளேயா?'' என்று வினவினார்.

''ஆம், பிரபு! அம்மையின் மாளிகைக்குள்தான் போனார். ஒரு நாழிகை நேரம் வீட்டுக்குள்ளே இருந்து விட்டு வெளியேறினார். அந்த ஒரு நாழிகை நேரமும் நானும் அந்த வீதியிலேயே சுற்றி வந்து கொண்டிருந்தேன். ஒரு தடவை வீட்டு வாசலுக்கு அருகில் சென்று காவலரில் ஒருவனிடம், 'சமீபத்தில் சத்திரம் சாவடி, எங்கேயாவது இருக்கிறதா?' என்று விசாரித்தேன். அப்போது உள்ளே சிவகாமி அம்மை புத்த பிக்ஷுவின் தலையில் நெருப்புத் தணலைக் கொட்டிக் கொண்டிருந்தார்.



# தர்மம்

பண்புக்கும் தர்மத்துக்கும் உதாரணமாகத் திகழ்ந்து ஊர் மக்களின் பெரு மதிப்புக்கும் பாத்திரமாயிருந்த ஒருவரின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாபெரும் சோதனைதான் இந்நாடகத்தின் அடிப்படைக் கருத்து. சத்தியம் தவறாத கணபாடிகளாக வந்து தத்ரூபமாக நடித்துக் கடைசிக் காட்சியில் உயிர் துறந்து நாடகத்துக்கே உயிர் கொடுத்தவர் ஆர். கே. ராமன்.

ரௌடி கருப்பையா, நாடகத்தின் மையப்புள்ளி. அப் பாத்திரத்துக்கு எல்லா விதத்திலும் பொருத்தமானவர் எம். ஆர். ஆர். வாசுதான். ஆரம்பக் காட்சிகளில் முரடனாகவும் முன்கோபியாகவும் தோன்றிய கருப்பையா கடைசிக் காட்சியில் திருந்துவது நாடகத்தின் 'க்ளைமாக்ஸ்'. அந்தக் காட்சியில் வாசுவின் நடிப்பு மிகவும் பாராட்டுப் பெற்றது.

ஆத்திரத்தில் கருப்பையா செய்துவிட்ட கொலையை நேரில், கண்ணால் கண்ட ஒரே சாட்சி கணபாடிகள். அதை அவர் நீதிமன்றத்தில் மறுத்தார். ஆனால் தர்மம் அவரை வென்றது. நீதிமன்றத்தில் சொன்ன பொய்ச் சாட்சியின் மன உறுத்தலே அவரைக் கொன்றுவிட்டது. இதுதான் நாடகத்தின் கரு. இதைப் பளிச்சென்று வெளியிடாமல் என்னத்தை எல்லாமோ சேர்த்து விட்டார்கள்!

கணபாடிகளின் மனைவியின் அதீத அபிலாஷைகளை மேடையில் காட்டுவதில் நகைச்சுவையும் இல்லை; வெறும் சுவையும் இல்லை. அந்தப் பாத்திரம் கணபாடிகளின் உணர்வைக் காட்டுவதற்காகப் புகுத்தப்பட்டிருக்கிறது என்று சொல்லலாம். ஆனால் அது அசடு வழிகிறது. கணபாடிகளின் மைத்துனன் பிச்சுமணி மிகவும் முக்கியமான பாத்திரம். நாடகத்தின் சுவையான பாத்திரமும் கூட. அனந்து அதை ஏற்று நன்றாய் நடித்தார்.

கிராமச் சூழ்நிலையை வைத்துச் சற்றுப் புது மாதிரியாக இந்நாடகத்தைப் புனைந்திருப்பவர் எம். முத்துமோகன்.

கொஞ்சம் சிரமப்படுத்தினாலும் ஒரு நல்ல கருத்தைச் சொல்லும் நாடகம் பார்த்திபன் தியேட்டர்ஸ் அளிக்கும் "தர்மம்". -காந்தன்

---

அவ்வளவு கோபமாக அவர் பேசியது என் காதில் விழுந்தது. அதில் எனக்குப் பரம திருப்தி ஏற்பட்டது...!''

''எல்லோருக்கும் அப்படித்தான்!'' என்றான் குண்டோதரன்.

''அதே வீதியில் இருந்த ஒரு சத்திரத்தில் படுத்து இரவு நிம்மதியாகத் தூங்கினேன். இன்று பொழுது விடிந்து சற்று நேரம் ஆனதும் அம்மையின் மாளிகைக்குப் போனேன். என்னைப் பார்த்ததும் சிவகாமி அம்மைக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. பக்கத்திலிருந்த தோழியை ஏதோ காரியமாக உள்ளே போகச் சொல்லிவிட்டு, 'சத்ருக்னா! இது என்ன? காஞ்சிக்கு நீ போகவில்லையா? என்னைப் பின் தொடர்ந்தே வந்துவிட்டாயா?' என்று கேட்டார்.

'' 'இல்லை, அம்மணி! காஞ்சிக்குப் போய் மாமல்லரிடம் தாங்கள் கூறிய செய்தியைச் சொன்னேன். அவரும் வந்திருக்கிறார். சேனாதிபதியும் வந்திருக்கிறார்!' என்றேன்.

''இதைக் கேட்டதும் அம்மை உற்சாகமும் பரபரப்பும் அடைந்து, 'சைனியம் எங்கே இறங்கியிருக்கிறது?' என்று கேட்டார்.

''சைனியத்தோடு வரவில்லை என்றும், மாமல்லரோடு சேனாதிபதியும் கண்ணபிரானும் வந்திருக்கிறார்கள் என்றும், கோட்டைக்கு வெளியே இந்த மலை அடிவாரத்தில் இறங்கி யிருக்கிறார்கள் என்றும் தெரிவித்தேன். நாளை அமாவாசை இரவில் எல்லோரும் வருகிறோம் என்றும், தோழிப் பெண்ணை எங்கேயாவது அனுப்பிவிட்டு, நம்முடன் புறப்பட ஆயத்தமாயிருக்க வேண்டும் என்றும் சொல்லிவிட்டு வந்தேன்!'' என்று சத்ருக்னன் முடித்தான்.

''சத்ருக்னா! சிவகாமி முடிவாக என்ன சொன்னாள்? ஏதேனும் செய்தி உண்டா?'' என்று மாமல்லர் கேட்டார்.

''ஒன்றுமில்லை, பிரபு! அம்மை அதிகமாகப் பேசாமல் அமாவாசை இரவு நம்மை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகச் சொல்லி எனக்கு விடை கொடுத்தார். அவ்வளவுதான்!''

இதைக் கேட்ட மாமல்லர் சிந்தனையில் ஆழ்ந்தார். (தொடரும்)

# பந்தயத்தில்

பத்தாம் நெம்பர் 'வின்' கௌண்டரில் உட்கார்ந்திருக்கிருள் ராதா. வெளியே வரிசையில் நாலைந்து பேர்கள்.

''நம்பர் ஸிக்ஸ் வின் ப்ளீஸ் ....... ஸிக்ஸ் டிக்கெட்ஸ்..''

தலையைக் குனிந்து கொண்டு ராதா டிக்கெட்களை 'பஞ்ச்' பண்ணிக் கொடுத்தாள்.

''தேங்க் யூ மேடம்... ஓ... ஸாரி மிஸ்... தேங்க் யூ....'' என்று இலேசான குரலில் கூறிக் கொண்டே நகர்ந்தான் பிரபு.

அதற்கப்புறம் அடுத்த ரேஸ்... பத்தாம் நம்பர் கௌண்டரைப் பார்த்தான் பிரபு. பின்னாலிருந்து ராதாவும் அவனைப் பார்த்தாள்.

அதன் பின்னர் நான்காவது ரேஸ், ஐந்தாவது ரேஸ், ஏழாவது ரேஸ் என்று இப்படி மாறி மாறி ராதா இருந்த கௌண்டரிலேயே டிக்கெட் வாங்கினுன்.

அதன் பின்னர் கிண்டி ரேஸ் மைதானம் பிரபுவுக்கு இருவிதத்தில் பொழுதைப் போக்க உதவியது. கௌண்டருக்குப் பின்னாலிருந்த ராதாவும், கௌண்டருக்கு முன்னால் வந்து நிற்கும் பிரபுவும் அவ்வப்போது சில சில வார்த்தைகள் பேசிக் கொள்வார்கள்.

அவர்கள் நட்பு காதலாக மாறியதை உணர்ந்ததும் ராதாவின் தோழிகள் அவளைத் தனித்து விடத் தொடங்கி விட்டனர். எனவே, ரேஸ் முடியும் சமயம் பிரபுவும், ராதாவும் சேர்ந்தாற்போல் மைதானத்தை விட்டு வெளியேறி ஹோட்டல், பார்க் எங்காவது சந்திக்கத் தொடங்கினுர்கள்.

ஒரு நாள் பிரபு தன் உள்ளக் கிடக்கையை ராதாவிடம் தெளிவாகவே வெளியிட்டு விட்டான்.

''மிஸ் ராதா... நான் உங்களை ஒன்று கேட்க வேண்டும் என்று ரொம்ப நாட்களாக யோசனை செய்துகொண்டு வருகிறேன், கேட்கலாமா ?''

''கேளுங்களேன் !''

''நீங்கள்... நீங்கள்... என்னைப் பற்றி என்ன நினைக்கிறீங்க?''

தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் ராதா. அவள் புன்சிரிப்பு பிரபுவைக் கவர்ந்தது.

''என்னை... நீங்கள்... விரும்புகிறீர்கள் என்று நினைக்கிறேன்..... சரியா ராதா!''

''நோ ராதா, எனக்கு இந்த ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசம் பிடிக்காத விஷயங்கள்..... நான் ஒரு ரேஷனலிஸ்ட்..... ஸோஷியல் ரேஷனலிஸ்ட்.''

''உங்கஅம்மா, அப்பாவோட அபிப்பிராயங்கள் எப்படி இருக்குமோ ?''

''எனக்கு அம்மா இல்லே!''

''ஓ, மன்னிக்கணும்......''

''அப்பா புதுக்கோட்டையில் இருக்கிருர். ரிடையர்ட் மிலிடேரி ஆபீஸர்.... எஸ்டேட்டைப் பார்த்துக்கொண்டிருக்கிருர்....நோ பிரதர்ஸ்.... நோ ஸிஸ்டர்ஸ்.... ஒரே பிள்ளை. இங்கே வி. கே. இண்டஸ்ட்ரீஸ்லே என்ஜினீயராக இருக்கேன்....''

சட்டென்று ராதாவின் கண்ணில் நீர் சுரந்தது.

''சந்தேகமில்லாமல்...'' என்ருள் ராதா சட்டென்று.

''அப்பாடா.... நான் அதிர்ஷ்டசாலி... ராதா..''

''நானல்லவா அதிர்ஷ்டசாலி. நீங்கள்... ரொம்பப் பெரிய பணக்காரக் குடும்பம்னு நினைக்கிறேன்..... நீங்கள் என்னைப்போல் ஒரு சாதாரணப் பெண்ணை..... விரும்புகிறீர்கள் என்ருல் அது என் அதிர்ஷ்டம்தான் என்பேன் பிரபு.''



''ஐயாம் ஸாரி ராதா... ஏன் அழுகிறாய்?''

''ஒன்றுமில்லை பிரபு... எனக்கும் அம்மா இல்லை..... அதை நினைத்துத்தான் சற்று வருத்தப்பட்டேன்...''

''அடப் பாவமே....வீட்டிலே வேறு யார் யார்...இருக்கிறார்கள் ராதா!''

''பதினேழு வயதில் ஒரு தங்கை, பத்து வயதில், ஒன்பது வயதில் ஒரு தம்பி, ஒரு தங்கை — இத்துடன் — ஒரு ....ஒரு......''

''உன் அப்பா...''

''என் அப்பா ஒரு.... ஒரு.... இன்வேலிட்... அதனால்தான்...நானே ஒரு சின்னக் கம்பெனியிலே டைப்பிஸ்டாக வேலைக்குப் போகவேண்டி இருக்கிறது.... கூட..... இங்கே ரேஸ் கோர்ஸிலே பார்ட் டைம் வேலை பார்க்கவேண்டியு மிருக்கிறது.

''அவ்வளவு தானே ராதா! இன்றோடு உன் கஷ்டமெல்லாம் தீர்ந்து விட்டதென்று வைத்துக் கொள்..... என் அப்பாவிடம் சொல்லி.....உன் அப்பாவை வந்து முறையாகப் பெண் பார்க்கச் சொல்கிறேன்.. என் அப்பாவின் சம்மதம் எனக்கு நிச்சயம் உண்டு.''

''என் அப்பாவும் இதில் சம்மதிப்பார் என்றே நம்புகிறேன்... ஆனால்... ஆனால்...''

''ஆனால் என்ன ராதா, உன் குடும்பத்தை இனி யார் காப்பாத்தப் போறாங்கன்னு கேட்கப் போறியா....? அதுக்கும் இதோ பதில் தயார்.... நான் அவர்கள் எல்லோரையும் ஸப்போர்ட் பண்ணுகிறேன். நீ வேலைக்குப் போக வேண்டும் என்று உனக்குத் தோன்றினால் அதையும் அனுமதிக்கிறேன்... இங்கே ரேஸ் கோர்ஸிலே பார்ட் டைம் வேலை பார்க்கணும் என்று தோன்றினால் அதைக் கூட அனுமதிக்கிறேன். சரியா ராதா ?''

''என்னை நீங்கள் இனிமேல் ரேஸ் கோர்ஸிலே வேலை செய்ய அனுமதித்தாலும், அனுமதிக்காவிட்டாலும் எனக்கு ஒன்றும் இல்லை.... ஆனால்.... நிச்சயம் இனி மேல்.... நீங்கள் ரேஸ்கோர்ஸுக்குள் நுழைவதை நிறுத்திவிட வேண்டும்.... அதுதான் நான் விரும்புவது பிரபு!''

''என்ன! கல்யாணம் ஆவதற்கு முன்னாலேயே என்னை அதிகாரம் பண்ண ஆரம்பித்து விட்டாயா ராதா ?''

''அதிகாரம் பண்ணவில்லை, பிரபு! உங்களை வேண்டிக் கொள்கிறேன். இந்த ரேஸ் பழக்கம் ரொம்பக் கொடிய பழக்கம் பிரபு..... எத்தனையோ குடும்பங்களை அது பாழ்பண்ணியிருக்கிறது, தெரியுமா ?..... உங்களை..... இந்த ஸீஸன் முழுவதும் கவனித்துக்கொண்டு தானே வந்திருக்கிறேன்..... ஒரு நாள்கூட ரேசுக்கு வரத் தவறவில்லையே!''

''ராதா....'' சற்றுக் கோபமாகக் கேட்டான் பிரபு. ''உன் மனத்தில் என்ன தோன்றியிருக்கிறது ராதா ? இவன் பெரும் சூதாடி.... குடும்பத்தைக் காப்பாற்றுவானோ மாட்டானோ என்று....''

''பிரபு..... ப்ளீஸ்.... அப்படியெல்லாம் நான் உங்களைச் சந்தேகிக்கவில்லை.''

ராதா மேற்கொண்டு வேறெதுவும் பேசவில்லை. அவனைப் பிரிந்து சென்றாள்.

நாட்கள் சென்றன. பந்தய ஸீஸன் முடிந்தது. இனி சில மாதங்கள் வரை அவர்களால் பந்தய மைதானத்துக்குள் சந்திக்கவே முடியாது.

கடைசி நாளன்று பிரபு பேசவே இல்லை. ராதா பொங்கி வரும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். இனி அடுத்த ஸீஸனுக்குத் தான் அவர்கள் பார்த்துக் கொள்ள முடியும். அதுவும் அவனுக்கு அங்கே பஞ்சிங் வேலை கிடைத்தாக வேண்டும்.

குதிரைப் பந்தய மைதானத்திலேயே வேலை செய்தாள் ராதா. வயிற்றுப்பாட்டுக்கு வகை செய்ய அங்கே பார்ட்–டைம் வேலை செய்தது, வேறு வழி இல்லாததால். ஆனால் தன் காதலன், கணவனாக வரக் கூடியவன் ரேஸ் ஆடுவதை அவள் சிறிதும் விரும்பவில்லை.

அரசாங்கம் குதிரைப்பந்தயத்தைத் தடை செய்யப் போகிறது என்பதை அன்று படித்த ராதாவின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இனி ராதா பிரபுவின் நட்பில் மீண்டும் அந்த இன்பம் இருக்க முடியுமா ?

காரியாலயத்தில் சிந்தனை வயப்பட்டிருந்த ராதாவை ஆபீஸ் சேவகன் வந்து கூப்பிட்டான்.

''அம்மா! உங்களை யாரோ பிரபு என்கிறவர் கூப்பிடுகிறாரம்மா....!''

ஏற்கனவேயே பிரபு அவளிடம் போனில் அவ்வப்போது பேசியுள்ளவன்தான். எனவே இதில் புதுமை ஒன்றுமில்லை. ஆயினும் படபடத்த உள்ளத்துடன் போனை எடுத்தாள் இன்று.

''யெஸ்... ராதா ஹியர்....''

''ராதா... நான் பிரபு பேசுகிறேன்..... ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்.... இப்போது உன் ஆபீசுக்கு வந்து உன்னை...''

''முக்கியமான விஷயம் எது என்று எனக்குத் தெரியும் பிரபு!'' என்றவள் மெல்லிய குரலில், ''இந்த வருஷம் முதல் ரேஸை நிறுத்திவிடப் போகிறார்கள் மெட்ராஸில்.... அதுதானே!'' என்றாள் மகிழ்ச்சியுடன்.

'' ராதா !'' — பிரபு டெலிபோனில் தொடர்ந்தான்: ''அதுதான் அவ்வளவு முக்கியமான விஷயமாகப்படுகிறதா, உனக்கு...? இங்கில்லாவிட்டால் பங்களூர், ஹைதராபாத் என்று போய் ஆடுவேன்?''

''பிரபு.... நீங்கள் ஏன் இவ்வளவு....''

சொல்லி வைத்தாற்போல் எங்கேயோ, ஏதோ கோளாறு ஆகி டெலிபோன் கனெக்ஷன் நின்றது.

''ஹலோ... ஹலோ... ராதா... ஆப்பரேட்டர்... என்ன ஆச்சு டெலிபோன்....'' என்று பிரபு அங்கே பதறினான்.

''ஸாரி ஸார்...., எக்ஸ்சேஞ்சிலே ஏதோ தகராறு...நான் அப்புறமா அந்த நம்பரை டயல் பண்ணுகிறேன் ஸார்!'' என்றாள், டெலிபோன் ஆப்பரேட்டர்.

ஏதேதோ சிந்தனையில் ஈடுபட்டுக் காரியாலய வேலையில் ஆழ்ந்திருந்த ராதாவைக் கடிகார மணி மூன்று அடித்துச் சற்றுத் திடுக்கிட வைத்தது. அவள் எதிர்பார்த்தாற்போல் ஒரு சோகப் புன்னகையுடன், ''ராதா !'' என அழைத்தபடி பிரபு அவள் மேஜையின் முன் வந்து நின்றான்.

''நீங்களா ?''

''யெஸ்.... மத்தியானம் டெலிபோன் கனெக்ஷன் திடீரென்று கட் ஆகிவிட்டது போலிருக்கிறது ராதா... ப்ளீஸ்... ஒரு பத்து நிமிஷம் முக்கியமான விஷயம் பேச வேண்டும் உன்னிடம்.... கொஞ்சம் பெர்மிஷன் வாங்கிக் கொண்டு வா...வெளியிலே போகலாம்.''

''பிரபு.... இனி அதற்கு அவசியமே இருக்காது.... ஒரு ரேஸ் அடிமைக்கு நான் மனைவியாக முடியாது.... மன்னித்து விடுங்கள்'' என்று கூறிவிட்டாள் ராதா கம்மிய குரலில்.

''என்ன... இங்கேயே.... ஆபீஸிலேயே... என் பெர்ஸனல் மேட்டரை.... நாலு பேருக்கு நடுவிலேயே விமரிசிக்கத் தொடங்கிவிட்டாயே ராதா.... உனக்கு மேனர்ஸ் எதுவுமே தெரியாதா ?''

அவன் ஆத்திரத்துடன் கூறிக் கொண்டிருந்தது எல்லாம் ராதாவின் காதில் விழவே இல்லை.

பக்கத்திலிருந்தவர் ஏதோ அவளிடம் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் குரலிலே தவிர்க்க முடியாத ஒரு பரபரப்பு.....

''இப்போதுதானம்மா ராதா போன் வந்தது.... நீ வீட்டுக்குப் போய்க் கொள்.... பாவம், உன் அப்பாவின் நிலைமை... நான் மானேஜரிடம் சொல்லிக் கொள்கிறேன். உன் சின்னத் தங்கைதான் போன் பண்ணினாள்.''

பரபரவென்று பிரபுவிடம்கூடச் சொல்லிக் கொள்ளாமல் காரியாலயத்தைவிட்டு வெளியேறினாள் ராதா. அவள் காரியாலய நண்பரைத் தொட்டுக் கேட்டான் பிரபு.

''ஆமாம்..... ஏன் ஸார்.... ராதா ஏன் இப்படி.... ராதாவின் அப்பாவுக்கு என்ன ஸார் உடம்பு....?''

''மிஸ்டர் பிரபுதானே நீங்கள்? பாவம் ராதா...அவள் அப்பாவுக்குச் சித்தக் கோளாறு ... ஏழெட்டு வருஷங்களாக.... பைத்தியக்கார ஆஸ்பத்திரியில்கூட ஓரிரு தடவை அட்மிட் பண்ணிப் பார்த்தாயிற்று... அதுவும் பலன் தரவில்லை. இன்று திடீரென்று அதிகமாகி அக்கம்பக்கத்தில் உள்ளவர்களுக்கு உபத்திரவமாக முடிந்திருக்கிறது. அதுதான் ஃபோன்.''

''ஸார்...போதும் போதும்...நான் இப்போதே ராதாவின் வீட்டுக்குப் போகிறேன்.''

''விலாசம் தெரியுமா மிஸ்டர் பிரபு....?''

''தெரியும்.''

தலை தெறிக்கும் வேகத்தில் ஸ்கூட்டரைச் செலுத்திக் கொண்டு போனான் பிரபு.

வீட்டு வாசலிலேயே ஒரு சிலர் — பக்கத்துப் போர்ஷன்காரர்கள் அல்லது அண்டை அயலார்கள் கோபமாகக் கத்திக் கொண்டிருந்தார்கள்.

ஐம்பது வயது மதிக்கத்தக்க பெரியவர் ஒருவர் — அவர்தான் ராதாவின் தந்தையாக இருக்க வேண்டும் என பிரபு யூகித்தான் — கன்னாபின்னாவென்று உளறிக் கொண்டிருந்தார். அந்த உளறலைக் கேட்ட பிரபுவுக்கோ பதறியது. இப்படி ஒரு பயங்கரமா ?

'பார்த்தீர்களா, இவர் நிலைமையை' என்று இரங்கும் பாவத்தில் பிரபுவைப் பார்த்தாள்.

''ராதா...இப்போது புரிகிறது எல்லாம்'' என்று தழுதழுக்கக் கூறிய பிரபுவை நெருங்கினார் ராதாவின் தந்தை.

''யாரடா நீ? ஜாக்கி வின்சென்ட்தானே? உன்னை நம்பித்தானேடா கல்யாணகுமாரி மேலே ஐயாயிரம் கட்டினேன். கோட்டை விட்டேன்.... ராஸ்கல்... இந்த டிரெய்னர் ராஜவேல் இருக்கானே.... அவன்தானேடா எனக்கு ராங் இன்பர்மேஷன் கொடுத்தான்... இல்லாட்டா அன்னிக்கு அந்த ஜாக்பாட் ரெண்டு லட்சமும் எனக்குத்தானேடா வந்திருக்கும்.... டேய்... நீ அவன் ஸ்டேபிள் பாய்தானே !'' — பிதற்றிக் கொண்டே வந்த ராதாவின் தந்தை பிரபுவின் கழுத்தைப் பிடிக்கத் தொடங்கினார்.

''ஐயோ அப்பா... அவர் ஸ்டேபிள் பாய் இல்லே.... நமக்கு வேண்டியவர்... அவரை ஒன்றும் செய்யாதீர்கள்.... பிரபு...தயவு செய்து நீங்கள் தள்ளிப் போய்விடுங்கள். அவர் ஏதோ வெறியில் இருக்கிறார்... தவறாக எண்ணாதீர்கள்!'' என்று பிரபுவை விலக்கி விட்டுத் தன் தந்தையை ஏதோ சமாதானம் சொல்லிக் கொண்டே வேறு ஓர் அறைக்குள் அழைத்துச் சென்றாள்.

ஓர் ஐந்து நிமிஷங்களுக்குப் பின்னர் அந்த அறையைவிட்டு வெளியே வந்த ராதாவின் கண்களையே மலங்க மலங்கப்பார்த்தான்பிரபு.

''ராதா...இது...இது...இவருக்கு எத்தனை நாட்களாக இருக்கிறது ராதா.... டாக்டர்களால் குணப்படுத்த முடியவில்லையா...?''

''ஏழு வருஷங்களாக அவருக்குப் புத்தி தடுமாறிவிட்டது· பிரபு.... தமது இருபதாவது வயதிலிருந்தே விடாமல் ரேசுக்குப் போய் வந்தவர், சொத்தையெல்லாம்விட்டார். சுகத்தையெல்லாம் விட்டார்....ஒரே கடன்.... அம்மா இந்தத் துக்கத்திலேயே போய்விட்டாள்..௬ அப்பாவுக்கு வேலையும் போயிற்று.... கடைசியில் திமர் என்று ஒரு

■

## மாணவர் ஊர்வலம் !

சென்னையில் உலகப் பல்கலைக் கழகச் சேவா சங்கத்தைச் சேர்ந்த மாணவர்கள் சைக்கிள் ஊர்வலம் நடத்தினார்கள். புகை கக்கும் கார்களால் தேக ஆரோக்கியம் கெடுகிறது என்று எச்சரிக்கை விடுத்தார்கள். சைக்கிள் பயணம் சிக்கனமானது; ஆரோக்கியமானது; தூய்மைக் கேடு (Pollution) விளைவிக்காதது என்றார்கள். அராபிய எண்ணெயின் விலை உயர்வு சைக்கிளைப் பாதிக்காதல்லவா ? கூடிய வரை கார், ஸ்கூட்டர்களைத் தவிர்த்துச் சைக்கிள்களைப் பயன்படுத்தலாமே ?

■






புதிய அமெரிக்கத் தூதர் ஸாக்ஸ்பி நமது ஜனாதிபதியைச் சந்தித்து, அமெரிக்க ஜனாதிபதி தமக்கு அளித்த நியமன உத்தரவை வழங்குகிறார்.

சென்னை நக்கீரர் கழகம் சார்பில் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியில் 'கல்வி நெறிக் காவலர்' திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் திருவுருவப் படத்தினை நாடாளுமன்ற உறுப்பினர் திரு கா. து. நடராஜன் அவர்கள் திறந்து வைத்தார். திரு கா. து. நடராஜன், திரு எஸ். வடிவேல் பிள்ளை, திரு ஜே. ராமச்சந்திரன் (முதல்வர் மாநிலக் கல்லூரி) திரு கா. ஏ. அருணாசலம் (கழகத் தலைவர்) ஆகியோரைப் படத்தில் காணலாம். விழாவில் பதின்மூன்று கழகப் புலவர்களுக்குப் பரிசுகள் அளிக்கப்பட்டன.



நான்... ஒரு நாள்.... புத்தியே பேதலித்து விட்டது பிரபு....''

''ராதா...ராதா... இதோ என்னைப் பார். நீ இத்தனை நாள் ரேஸின் மீது காட்டிய வெறுப்பு ஏன் என்று இப்போதுதான் எனக்குப் புரிந்தது. உன் அப்பாவுக்கு வந்தது.... எனக்கும் வந்துவிடப் போகிறதே என்று நீ பயந்ததில் நியாயம் இருக்கிறது, ராதா!''

''ஆமாம், பிரபு...!'' தேம்பித் தேம்பி அழுதாள் ராதா. ''சொத்து போனாலும் சரி, சுகம் போனாலும் சரி... இந்த மாதிரி... என் அப்பா மாதிரி.... அதுவும் போய்விடப் போகிறதோ என்றைக்காவது ஒரு நாள் உங்களுக்கு என்ற பயங்கரமான கற்பனையே என்னை இத்தனை நாள் கொன்றுவிட்டது பிரபு...''

''ஐயாம் ஸாரி ராதா ! தான் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவளின் எல்லாவித நலத்திலும் ஒரு பெண்ணுக்குக் கருத்துரிமை உண்டு என்பதை நான் மதிக்காமல் போய்விட்டேன்... இதோ பார்.... நான் இனிமேல் நிச்சயமாக.... வேண்டுமானால் சத்தியமாக.... ரேஸுக்குப் போக மாட்டேன்....''

''பிரபு!'' உணர்ச்சி பொங்க அவன் கால்களில் விழப் போனாள் ராதா. பிரபு அவளைத் தடுத்து நிறுத்தினான்.

''ராதா, டாக்டர் பிரதாப் மேத்தா என்று ஒரு பிரபலமான மனத்தத்துவ டாக்டரை எனக்குத் தெரியும். உன் அப்பாவை நாளைக் காலையில் அவரிடம் அழைத்துச் செல்லலாம். அவர் குணப்படுத்தாத மன நோய்களே இல்லை'' என்று பிரபு கூறி முடித்ததுமே ராதா கேட்டாள்:

''நீங்கள்.... இன்று இரவு... உங்கள் அப்பாவைப் பார்க்கப் புதுக்கோட்டை போவதாகச் சொன்னீர்களே....''

'' 'மணப் பெண் சம்மதித்துவிட்டாள்' என்று அவருக்குத் தந்தி கொடுத்துவிட்டால் போயிற்று.''

''பிரபு... நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்றே....''

''ஓ ! உனக்குப் புரியவில்லையா ராதா? நான் உன்னை விரும்புவதைப் பற்றித்தான் முன்னமேயே என் அப்பாவுக்குத் தெரிவித்திருக்கிறேனே..... நீ அறிந்ததுதானே 'அதுவும்.... நான் இன்று ஊருக்குப் போய் நாளை மறு நாள் அப்பாவுடன் திரும்பி வந்து... ஐ மீன்.... அவரை உன் அப்பாவிடம் உன்னைப் பெண் கேட்க அனுப்புவதாக ஏற்பாடு....என் அப்பா கண்டிப்பாக எழுதியிருந்தார் புறப்பட்டு வரும்படி...... அதனால் தான் உன்னைக் காரியாலயத்தில் அவசரமாகச் சந்திக்க வந்தேன்..... இப்போதுதான்.... உன் சம்மதம் கிடைத்துவிட்டதே ராதா.... அப்பாவுக்கு நான் சொன்ன மாதிரியே தந்தி கொடுத்து விடட்டுமா ராதா !''

நாணத்துடன் தன் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் ராதா.

# வட்ட மேஜை

எதிர்காலச் சிறப்பிதழ் எல்லா வகையிலும் சிறந்திருந்தது. 'எதிர்காலத்தை எழுதியவர்கள்' என்ற தலைப்பில் கி. பி. 2000, மண்குடிசை என்ற புதினங்களை எழுதிய டாக்டர் மு. வ. அவர்களைக் குறிப்பிட்டிருக்கலாம்.

சென்னை—29
7—3—75 க.ப. அறவண்ணன்

(அட்டைப் படத்தை வழங்கிய திரு உத்தராவின் பெயரைக் குறிப்பிடாததும் ஒரு குறை. - ஆர்.)

நான் என் கணவருடன் இங்குள்ள 'ஸ்கந்தகிரி மலைக் கோயிலுக்கு ஷஷ்டி அன்று சென்றிருந்தேன். இங்கு சைக்கிளில் 'டபிள்ஸ்' போவது அனுமதிக்கப்பட்ட ஒன்று. என் கணவருக்கு மிகுந்த தெய்வ பக்தி உண்டு. இருந்தும் வேலைப் பளு காரணமாக அவர் மற்றொரு நாள்போகலாம் என்றார்.நான் வற்புறுத்தவே இருவரும் சைக்கிளில் சென்றோம்.

சிறிது மலைப்பாங்கான அந்த இடத்தில் சைக்கிள் பலமாக மிதிபடவே சைக்கிள் செயினின் 'ரிவெட்' உடைந்து செயின் கீழே விழுந்து விட்டது. கணவர் சிறிது மனவருத்தத்துடன்தான் கோவிலைச் சுற்றி வந்தார்.

மேலிருந்து பார்த்தபோது, சைக்கிளை யாரோ எடுப்பது தெரிந்தது. நான் கத்தவே, சைக்கிள் திருடன் பெடல் மீது காலை வைத்து அழுத்தினான். செயின் இல்லாத பெடல் இமெரென்று கீழே வந்து அவனைக் கீழே தள்ளிவிட்டது. நாங்களும் கீழே இறங்கி வரவே, அவன் எடுத்தான் ஓட்டம்! செயின் உடையாதிருந்திருந்தால், சைக்கிள் போயே போயிருக்கும்.

கணவர் இன்னும் ஒரு தரம் கோயிலைச் சுற்றிவிட்டு வந்தார். நாங்கள் அரை மைல் சைக்கிளைத் தள்ளிக் கொண்டுதான் சென்றோம் ஆனால் மனத்தில் பெருத்த நிம்மதி இருந்தது.

திருச்சி போலாரம்
6—3—75 வே. சிவகாம சுந்தரி

தங்கள் கல்கி 9-3-75 இதழ் வெகு பிரமாதம். மூக்கில் வைத்த விரலை எடுக்கத் தோன்றவேயில்லை கடைசி வரையில். சுஜாதாவின் கதையும், கி. ராஜேந்திரனின் கதையும் இரட்டிப்பு சுவையாக இருந்தன. பாணன் எழுதிய 'வளமை மிக்க எதிர்காலம்' அழகாகத் தொகுக்கப்பட்டிருந்தது. ஆனால் அவர் **கிரையோ ஸர்ஜரி** (Cryo Surgery) எனப்படும் உடல்நலத் துறைக்கு விண்வெளி ஆராய்ச்சி பயன்படுவது பற்றி எழுதாதது ஏமாற்றம். திரவ நைட்ரஜனை ஊசி மூலம் உள்ளே செலுத்தி —173°C அளவுக்குக் குளிர்ச்சி உண்டாக்கிச் சிறிதும் வலியில்லாமல் நடக்கும் அறுவை சிகிச்சை, மிக அற்புதமே. அதை அக்குபங்க்ச்சருக்கு(Acupuncture) ஈடாக மருத்துவர்கள் கருதுகின்றனர் என்பது அவர் ஆதாரம் காட்டிய நூலிலேயே உள்ளது.

11—3—75
ஸ்ரீரங்கம் பா. ஷியாம் சுந்தர்

# சட்டையை மாற்றும் ஒவ்வொரு முறையும் ஏறத்தாழ ரூ.1 சேமியுங்கள்



அந்த ரூ. ஒன்றே சாதாரண சட்டையைத் துவைத்து அணிவதற்கேற்ற அழகுடன் மிளிர நீங்கள் தரும் சராசரி விலையாகும். நீங்கள் உடுத்துவது 'டெரீன்'® துணியாயிருப்பின் மிடுக்குடன் விளங்க அந்தச் செலவு தேவையேயில்லை. ஏனெனில் 'டெரீன்' துணிகளை இல்லத்திலேயே எளிதில் துவைக்கலாம். இஸ்திரி அவசியமில்லை. உங்கள் நன்மைக்காக நீங்கள் துணிமணிகள் வாங்கும்போது 'டெரீன்' ட்ரேட்மார்க்கைப் பார்த்து வாங்குங்கள். அவற்றின் விலை அதிகமாயினும் சாதாரண துணிகளைவிட மும்மடங்கு அதிகமாக உழைப்பதால், இரண்டு சட்டைகள் அதிகமாகக் கிடைப்பதற்குச் சமம். இரகங்களில் 'டெரீன்' ஒன்றே எடுப்பான தோற்றத்திற்கும் வரவுக்குத் தக்கபடி வாங்கவும் மிகவும் ஏற்றது.

**துணிமணிகளிலுள்ள 'டெரீன்' ட்ரேட்மார்க் அவற்றின் தரச் சிறப்பை உறுதி செய்கிறது.**

TERENE

® 'டெரீன்'—கெமிக்கல்ஸ் அண்ட் ஃபைபர்ஸ் ஆப் இந்தியா லிமிடெடின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்

## 34. உல்லாசப் பயணம்

### புதுப் புதுக் காட்சியில் பொலிந்திடும் கற்பனை

கடந்த அத்தியாயத்தில், ''சுய புராணம்'' என்ற தலைப்புக் கொண்ட கட்டுரையிலிருந்து மேற்கோள்கள் பார்த்தோம் அல்லவா? அந்த விநோதத் தலைப்புக்குப் பொருத்தமாய், அதன் முதல் பகுதியின் பெயர், தற்சிறப்புப்பாயிரம்! அந்தப் பாயிரத்தின் முதல் இரண்டு வாக்கியங்கள் இவை:

சென்ற மார்ச்சு மீ 19 உ நான் கன்னிக் கோட்டை சிறையிலிருந்து வெளியாகி, சென்னை நகர் வந்து சேர்ந்ததும், நமது விகடனின் சென்ற ஆறு மாத இதழ்களை மிக்க ஆவலுடன் புரட்டலானேன். அப்போது அடியேன் சிறை புகுந்தது குறித்து, சென்ற அக்டோபர் மாதத்து இதழில் ''விகடன்'' எழுதியிருந்த குறிப்பு என் கண்முன் வந்து நின்றது.

அவர் குறிப்பிட்ட குறிப்பு இதுவே:

நமது அன்பரின் சிறைவாசம்

''கல்கி'' என்ற புனைபெயருடன் விகடன் நேயர்களுக்கு இன்பமூட்டி வந்த அன்பர், காந்தி ஆசிரமம் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி கோபிச் செட்டிப் பாளையத்தில் 144 தடை உத்தரவை மீறியதற்காகச் சிறைவாசத் தண்டனை அடைந்தார். ''கல்கி''யால் எழுதப்பட்டுள்ள கட்டுரைகள் பல நம்மிடம் இருப்பதால், விகடன் நேயர்கள் எப்பொழுதும் போல் அவரது நகைச் சுவையை அனுபவித்து வரலாம். சிறை செல்வதற்கு முன்னர் அவர் எழுதிய கடைசி வியாசம், ''சிறைவாச ஞாபகங்கள்'' என்பது நேயர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். அவர் எழுதியது பழைய (முதலாவது) சிறைவாசத்தைப் பற்றியது. இப்பொழுது சிறைவாசத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. விகடன் நேயர்களுக்கெனப் பிரத்யேகமாகப் ''புதிய சிறைவாச ஞாபகங்கள்'' என எழுதுவதற்காகவும் அவர் சிறை சென்றிருக்கக் கூடும்!

இதன்படியே மே மாத இதழில் கல்கி எழுதினார். ஆனால் அந்தக் குறிப்பில் கண்டபடி சிறைவாசத்தில் மாறுதல்கள் அதிகம் இல்லை.

''புதிய சிறைவாச ஞாபகங்கள்'' — உண்மையில் சிறைக்குள் புகுந்ததும் பழைய ஞாபகங்கள்தான் வந்தன. நான் சிறை சென்றதுதான் புதிதே தவிர, சிறைக்குள் எல்லாம் பழைமையேதான். சாப்பாடு, சட்டதிட்டம் எல்லாம் எட்டு வருஷத்துக்கு முன் பார்த்தது போலவே இருந்தன. முதல் நாள் மத்தியானம் சாப்பாடு வந்ததோ இல்லையோ, பழைய சிறைக் குழம்பின் வாசனை ஜம்மென்று மூக்கில் வந்து தாக்கிற்று. நீண்ட நாட்களாகப் பிரிந்திருந்த பழைய சிநேகிதனைத் திரும்பக் கண்டது போல் மன மகிழ்ச்சியடைந்தேன். உலகத்திலே எல்லாப் பொருள்களும் அடிக்கடி மாறுதல் அடைந்து வருகின்றன. ஆனால் சிறைச்சாலைக் குழம்பு மட்டும் என்றும் மாறாத இளமை பெற்று விளங்குவது ஆச்சரியமல்லவா? அதே முள்ளங்கி, அதே கீரைத் தழை, அதே வெங்காயத் தாளிதம்!

● கல்கியிடம் ருக்மிணி, தனக்கு ராஜாஜி எழுதியிருந்த கடிதம் ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தாள்

அப்புறம், ரோமங்களை உதிர்த்துக் கொண்டே இருக்கும் அதே கம்பளி; என்ன செய்தும் தொலையாமல் தொல்லை செய்யும் அதே ஈ, எறும்பு, மூட்டைப்பூச்சிகள்.

உடை விஷயத்தில் வித்தியாசம் இருக்கவே செய்தது. முன் போலக் கடுங்காவல் கைதியாய் அல்லாமல் அப்போது வெறுங்காவல் கைதியாக இருந்ததால், குரங்குக் கோலமான சிறை உடையை அல்லாமல், சொந்த உடையை அணிவதற்குக் கல்கி அனுமதிக்கப்பட்டார். ஆயினும் என்ன? வாரத்துக்கு ஒரு நாள்தான் குளிக்க அனுமதி உண்டாதலால், அதே தலைப்படிதான் உடையைத் துவைத்துக் கொள்ள முடியும்.

ஒரு நல்ல மாறுதலாய், சாப்பாட்டுக்கு மோர் கிடைப்பதாக இருந்தது. ஆனால் அதுபற்றிய உத்தரவு, மோர் வடிவில் அல்லது மோர் என்ற பேர் வடிவில் வருவதற்கு முன்னால், விடுதலை உத்தரவு வந்து விட்டது.

எழுத்தாளர் என்ற முறையில் ஒரு வித்தியாசம் நிச்சயமாய் இருந்தது. முதலாவது சிறைவாசத்தில் ஒரு நாவலை எழுதியது போல், இரண்டாவதில் கல்கி எழுத முடியவில்லை.

சிறையில் புதிய புத்தகம் ஒன்றும் நான் எழுதவில்லை. இது தமிழர்களுக்கு மிகவும் சந்தோஷமான செய்தி அல்லவா? இதன் பொருட்டு அவர்கள் யாருக்காவது நன்றி பாராட்டுவதென்றால், எனக்குப் பேனாவும் காகிதமும் கொடுக்க மறுத்த அதிகாரிகளுக்குத்தான் நன்றி செலுத்த வேண்டும். ''தேசபக்தர் ஸ்ரீமான் ... சிறைவாசத்தின் போது எழுதியது'' என்பதாக முகப்புப் பக்கத்தில் அச்சிட்டு ஒரு புத்தகம் வெளியிட எனக்கு மிகுந்த ஆவல் உண்டு. அப்படி வெளியிட்டு விட்டால், தேசத்துக்காக நான் சிறை புகுந்த விஷயத்தை அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொண்டிருக்க வேண்டியதில்லையன்றோ?

அப்படிக் கல்கி சிறைக்குள்ளே எழுத இயலாமற் போனது ஒருவகையில் நல்லதாயிற்று. சிறைவாச காலத்திலும் அதற்கு முந்திய பரபரப்பான காலத்திலும் அவர் அடைந்த விதவித அநுபவங்கள் மனத்தில் விளைந்து, கற்பனையில் கலந்து, ''தியாக பூமி'' முதல் ''அலை ஓசை'' வரை, சிறிய பெரிய நாவல்



''நாசமாப் போச்சு! இந்த ஜெயில் மொட்டை என்னை அடையாளம் தெரியாதபடி அடிச்சுடுத்து போலிருக்கே!''

''ராகவன் விமானத்தில் ஏறி வானத்தில் வட்டமிட்ட போதெல்லாம் அவனுடைய நினைவு மட்டும் கீழே பூமியில் நின்ற தாரிணியைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது.'' — அலை ஓசையில் தாரிணி - ராகவன் சந்திக்கும் அத்தியாயத்துக்கு ஓவியர் சந்திரா வரைந்த படம்.





களிலும், எத்தனையோ சிறுகதைகளி லும் பூத்துக் குலுங்க ஏதுவாயிற்று.

மெலிந்த உடம்பு, வாடி வதங்கிய முகம், மொட்டைத் தலை — இந்தக் கோலத்துடன் சிறையை விடுத்துச் சென்னையை அடைந்த கல்கி, நேரே துமிலன் வீட்டுக்குப் போனார். ''ராம சாமி அய்யர்!'' என்று கூப்பிட்டுக் கொண்டே நுழைந்த அவரைக் கண்டு, துமிலனின் மனைவி, ''நீங்க யாரு?'' என்று கேட்டார்.

''நாசமாப் போச்சு! இந்த ஜெயில் மொட்டை என்னை அடையாளம் தெரி யாதபடி அடிச்சுடுத்து போலிருக்கே!'' என்றார் கல்கி.

''ஓ நீங்களா!'' என்று பாலம்மாள் அடையாளம் கண்டு வரவேற்றார்.

கல்கியின் முகம் காட்டாத அடை யாளத்தை, ''நாசமாப் போச்சு'' என்று சொல்லும், அதைச் சொன்ன குரலும் காட்டி விட்டன. குரலைக் கேட்டு உள்ளறையிலிருந்து வந்த துமிலனும் நண்பரின் கோலத்தைக் கண்டு முதலில் திகைக்கத்தான் செய் தார். பின்னர் நிதானித்துக் கொண்டு அவரை நேசப் பெருக்குடன் வர வேற்று உபசரித்தார்.

அன்று மத்தியானம் கல்கி, துமிலன் வீட்டிலேயே ஆனந்தமாய்க் குளித்து விட்டு அதைவிட ஆனந்தமாய்ச் சாப் பிட்டார். அதற்கு முன்னாலும் பல தடவை அவர் பாலம்மாளின் சமையலை ருசித்ததுண்டு. ஆனால் அன்று போல் என்றும் அது அவ்வளவு ருசியாய் இருந் ததில்லை.

உண்ட மயக்கம் தீர்ந்த பின், ''வாருங்கள், வாசனைப் பார்க்கப் போகலாம்!'' என்று நண்பரைக் கூட் டிக் கொண்டு கல்கி புறப்பட்டார்.

வாசனும் அவருடைய தோற்றத் தைக் கண்டு மலைத்து விட்டுப் பின்னர் மகிழ்ச்சியுடன் அவரை வரவேற்றார்.

வாசனின் பத்திரிகைத் தொழிலும் மற்ற வியாபாரங்களும் மேலும் பெருகி இருந்ததை, அலுவலகத்தில் வெளிப் படையாய்த் தெரிந்த அடையாளங்கள் மூலம் கல்கி கண்டார்; வாசனின் வாய் மொழி மூலமாகவும் அறிந்து கொண்டார். ''பலே, பலே!'' என்றார்.

அதுதான் சமயம் என்று வாசன், ''இனி நீங்கள் நம்ம பத்திரிகையில் சேர்ந்து விடலாமே'' என்று ஆவ லுடன் அழைத்தார். ''நீங்கள் விரும் பியபடியே போராட்டத்தில் கலந்து கொண்டு சிறைக்குப் போய் வந்தாச்சு. விமோசனமோ நின்று போச்சு. இனி மேல் உங்களுக்கு ஆசிரமத்தில் இருக்க வேண்டியதில்லையே!''

''விமோசனம் நின்று போனாலும், ஆசிரமத்தில் இருந்து கொண்டு செய்ய வேண்டிய வேலைகள் நிறைய இருக்கின் றன'' என்றார் கல்கி. ''அதோடு, ராஜாஜியை விட்டுவரவும் மனமில்லை.''

''நீங்கள் அங்கே ராஜாஜியுடனிருந்து அவருக்குச் செய்யக்கூடிய உதவியை விடப் பல மடங்கு அதிகமான உதவியை இங்கே இருந்து கொண்டு செய்யலாம். ராஜாஜிக்கு விருப்பமான பிரசாரத்தை எல்லாம், நம்ம பத்திரிகை மூலம் எவ்வளவோ சிறப்பாய்ச் செய்யலாமே? இப்போதே பதினையாயிரம் பிரதிகள் செலவாகின்றன. இன்னும் மேலே மேலே கூடிக் கொண்டே போகும். இதைவிட மேலான பிரசார சாதனம், ராஜாஜிக்கோ உங்களுக்கோ வேறு ஏது? நீங்கள் வந்தால் இதைப் படிப் படியாய் வாரப் பத்திரிகையாகவே போடலாம் என்றிருக்கிறேன். அப் போது உங்களுக்கு வாய்ப்பு இன்னும் அதிகமாகும்.''

வாசனின் வாதமும் யோசனையும் சரியாகவே கல்கிக்குத் தோன்றின. ஆயினும் நன்றாய் யோசிக்க வேண்டும்; கொஞ்சம் பொறுக்க வேண்டும்.

ஆசிரமத்துக்குத் திரும்பி வருவதாய் வாக்களித்து விட்டதையும், ஊருக்குப் போய் மனைவியைக் கூட்டிக் கொண்டு திருச்செங்கோட்டுக்குப் போக வேண் டியதையும் அவர் வாசனிடம் கூறினார்.

கொஞ்சம் விட்டுப் பிடிக்கலாம் என்று வாசன் எண்ணினார். ''சரி, இப்போதைக்கு ஆசிரமத்திலிருந்தே எழுதி அனுப்புங்கள். இன்னும் அதிக மாயும் எழுதலாம்.'' அப்புறம், திடீ ரென்று ஞாபகப் படுத்திக் கொண்டவ ராய், ''ஊருக்குச் செல்வதற்கு முன் னால் ஹாய்யாகக் கராச்சி காங்கிரசுக் குப் போய் வாருங்களேன்'' என்று சொன்னார். ''இத்தனை நாள் சிறையி லிருந்த உங்களுக்கு ஓர் உல்லாசப் பயணமாச்சு; நம்ம பத்திரிகைக்கு நல்ல விஷயமும் ஆச்சு.''

அடைபட்டுக் கிடந்த பின் நெடிய தொரு பயணம் ஆனந்தமாய்த்தான் இருக்கும். கல்கி இணங்கினார்.

அந்தக் காங்கிரஸ் யாத்திரையின் போது, அவர் முதன் முதலாகக் கப்பல் பிரயாணத்தையும், விமானப் பிரயாணத்தையும் அனுபவித்தார்.

பம்பாயிலிருந்து கராச்சிக்குச் செல் கையிலும், அங்கிருந்து திரும்புகையி லும் கப்பல் பிரயாணம். அது பற்றிச் சில வாரங்களுக்குப் பின் அவர் எழுதிய கட்டுரையிலிருந்து ஒரு சிறு பகுதி:

# பெரியவளாகி உங்களை விட்டுப் பிரிந்த நெடுங்காலத்திற்குப் பின்பும் புகைப்படம் அவளை மறவாது.

ஒவ்வொரு 120 ரோல் பிலிம் சுருளுக்கும், உங்களுக்கு 12பெரிய (6×6) புகைப்படங்கள் கிடைக்கும். தனி விலைக்கு ஒரு விசேஷ தொழுறை போர்ட்ரெய்ட் லென்ஸ் மற்றும் ஃபிளாஷ்கள் கிடைக்கின்றன. தெளிவான பிரிண்டுகளுக்கும் என்லார்ஜ்மெண்டுகளுக்கும் ஆக்ஃபா-கேவர்ட் போட்டோ பேப்பர்களே வேண்டுமென வற்புறுத்துங்கள். அங்கீகாரம் பெற்ற எல்லா ஆக்ஃபா-கேவர்ட் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

AGI

ஏகபோக விநியோகஸ்தர்கள்:
ஆக்ஃபா-கேவர்ட் இந்தியா லிமிடெட்,
மர்ச்சண்ட் சேம்பர், 41, நியூ மெரின்லைன்ஸ், பம்பாய் 400 020
கிளை அலுவலகம்: பம்பாய் ● புது டெல்லி ● கல்கத்தா ● சென்னை
● புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்ஃபா-கேவர்ட் ஆன்ட்வெர்ப் வியாதுடன் அவர்களின் ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்
தயாரிப்பவர்கள்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.






SIMOES/AG/2/75 TAM

பெண்மைக்குரிய மென்மையுடனும்
நறு மணத்துடனும் திகழுங்கள்

புதிய பெடல் ஷவர்—
அன்றலர்ந்த வசந்த மலரின்
அருமையான நறு மணமும்,
மென்மையும் கூடிய டால்க்.




புதிய
பெடல் ஷவர் மட்டுமே
**இவ்வளவு**
**குறைவில்**
நறுமணங்கமழும்
மென்மையைத்
தருகிறது.

PSI G.I TM

வாழ்க்கையில் அநுபவத்திற்குரிய குற்ற மற்ற இன்பங்களில் கப்பல் பிரயாணமும் ஒன்றாகும். கப்பலின் மேல்தட்டின் முகப்பிலே மாலை நேரத்தில் நின்று நாலா புறமும் பார்த்தால், ஆகா! என்ன ஆனந்தம்! மேலே நீல வானம், கீழே நீலக் கடல்; சுற்றிலும் மூலைக்கடலை வானவளையம் முத்தமிட்டுத் தழுவும் காட்சி; மேற்கே பொற்குடத்தை முகிழ்ப்பது போன்ற சூரியாஸ்தமனத் தோற்றம். கிழக்கே பூர்ண சந்திரோதயம், கடல் அலைகளிலே தவழ்ந்து வந்த குளிர் காற்றின் இன்ப சுகம்.

(ஆ. வி. 14-4-'31)




டுலககளைப் பிரைந்தது'

"'ட்ரவுஸர்ஸ்' ஒருமையா? பன்மையா?" என்று டீச்சர் கேட்டாள்.

மாணவன் யோசித்துச் சொன்ன பதில்:
மேலே ஒருமை; கீழே பன்மை!

ஸ்டேட்ஸ்மன் - பாலி

விமானப் பிரயாணம், கராச்சி நகருக்கு உயரே. ஒரு குட்டி விமானத்தில் குட்டிப் பிரயாணம் —

பத்து ரூபாய்ச் செலவில் ஐந்து நிமிஷம் தேவ பதவி பெறும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. "கராச்சி காங்கிரசுக்குப் போனேன்; அங்கே ஆகாய விமானம் ஏறினேன்" என்று எப்பொழுதுமே சொல்லிக் கொண்டிருக்கலாமே என்பதை உத்தேசித்து மேற்படி காரியத்தில் துணிந்தேன். 'மோனோ பிளேன்' எனப்படும் அச்சிறு விமானத்தில் விமான ஓட்டியைத் தவிர ஒருவர்தான் உட்காரலாம். முன்னும் பின்னுமாக அதில் இரண்டு சிறு குழிகள் இருந்தன. முன் குழியில் நானும், பின் குழியில் விமான ஓட்டியும் உட்கார்ந்தோம். நடுவில் மறைப்பு இருந்தபடியால் உட்கார்ந்தபடி திரும்பிப் பார்த்தால் அவன் முகம் எனக்குத் தெரியாது.

விமானம் பூமியிலிருந்து கிளம்பித் தாவி ஆகாயத்தில் எழும்பலாயிற்று. ஒவ்வொரு தடவை அது தாவிய போதும் ஒரு முறை செத்துப் பிழைத்ததாக நினைத்தேன். ஆனால் முந்நூறு கஜ உயரம் கிளம்பிய பிறகு விமானம் நேராகப் பறக்கத் தொடங்கியதும் ஆகா; அந்த ஆனந்தத்தைச் சொல்லி அனுபவிக்கப் பக்கத்தில் ஒருவரும் இல்லையே என்ற துக்கம் உண்டாயிற்று.

கடற்கரை மைதானத்திலிருந்து கிளம்பிய ஆகாய விமானம் சுமார் ஐந்து மைல் தூரம் பறந்து காங்கிரஸ் நகருக்கு மேலாக வந்தது. அந்த அற்புதக் காட்சியை நான் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த போது, தலை மீது பட்டென்று ஓர் அடி விழுந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். ஒரு கை மட்டும் தெரிந்தது. அது விமான ஓட்டியின் கை யென்று சுலபமாகத் தெரிந்து கொண்டேன். அந்தக் கை கீழே சுட்டிக் காட்டியதிலிருந்து, காங்கிரஸ் நகரைப் பார்க்கும்படி எனக்குச் சொல்கிறான் என்று அறிந்தேன்.

(ஆ. வி. 15-12-'32)

அதே கப்பல் பயணத்தையும் விமானப் பயணத்தையும், பதினேழு ஆண்டுகளுக்குப் பிறகு கல்கி, "அலை ஓசை" நாவலில் பயன்படுத்திக் கொண்டார். அவற்றில் விமானப் பயணத்தை மட்டும் பார்ப்போம். தாம் ஏறிய அதே குட்டி விமானத்தில் கதாநாயகன் ராகவனை ஏற்றிவிட்டு, தாம் பார்த்த அதே கராச்சி நகரை வட்டமிட்டுப் பார்க்கச் செய்கிறார். அதே சமயம், முதல் தடவையாகத் தாரிணியைக் காணச் செய்கிறார். பின்னர் நாவல் நெடுகிலும் காதல் வட்டத்தில் அவளுடன் அவனைச் சுழல விடுகிறார்.

...பிறகு, இயந்திர யுகத்திற்கு அறிகுறியாக அந்த நாளில் கருதப்பட்ட ஆகாச விமானம் பார்க்கச் சென்றான். அப்போது கராச்சியில் புதிதாக ஆகாச விமானக்கூடம் கட்டியிருந்தார்கள். வாடகை விமானங்கள் வந்திருந்தன. ஐந்து ரூபாய் கொடுத்தால் ஆகாச விமானத்தில் ஐந்து நிமிஷம் பிரயாணம் செய்யலாம். விமானம் ஆகாசத்தில் இரண்டாயிரம் அடி உயரம் விர்ரென்று ஏறிக் கராச்சி நகரைச் சுற்றி ஒரு தடவை வட்டமிட்டுவிட்டு மறுபடியும் கீழே வந்து இறங்கும்.

விமான கூடத்துக்குப் போன போது ராகவன், விமானத்தில் ஏறுவது என்ற நிச்சயத்தோடு போகவில்லை. ஏதோ பார்க்கலாம் என்று போனான். அங்கே போன பிறகு கட்டாயம் ஏறியாக வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. ஏனெனில், ஆகாய விமானம் ஏறுவதையும் இறங்குவதையும் வேடிக்கை பார்ப்பதற்காக ஜனங்கள் நின்று கொண்டிருந்த இடத்தில் ராகவனுக்குப் பக்கத்தில் மூன்று வட நாட்டு ஸ்திரீகள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களிலே ஒரு ஸ்திரீ கொஞ்சம் வயதானவள். மற்ற இருவரும் இளம் பெண்கள். ஒருத்தி கட்டையாயும் குட்டையாயும் மாநிறமாயும் இருந்தாள். இன்னொரு பெண் ... ஆகா ... அவளை வர்ணிப்பது சாத்தியமில்லை. கார்த்திகை மாதத்துப் பூரண சந்திரனுடைய சந்தன நிறக் கிரணங்கள் ஒரு மந்திரவாதியினுடைய மந்திரத்தினால் பெண் உருக் கொண்டது போல் தோன்றினாள். பனிக் காலத்துக் காலை நேரத்தில் புல் நுனியில் நிற்கும் முத்துப் பனித் துளிகள், காலைச் சூரியக் கிரணங்களினால் ஒளி பெற்றுத் திகழ்வது போல், அவளுடைய கண் விழிகள் பிரகாசித்தன. பாலகோபாலன் அன்னை யசோதையிடம் வெண்ணெய் கேட்பதற்காகத் தவழ்ந்து செல்

னும் போது, அவனுடைய அரையில் கட்டியிருந்த கிண்கிணிகள் ஒலிப்பது போல் அந்தப் பெண்ணின் குரல் ஒலித்தது.

அத்தகைய போதை தரும் இன்பக் குரலில் அப்பெண், ''நீங்கள் மதராஸ்காரரா?'' என்று ஆங்கில பாஷையில் கேட்ட போது, ராகவன் மிக ரஸித்த ஷெல்லி, கீட்ஸ் கவிதைகளைக் காட்டிலும் இனிமை வாய்ந்த கவிதைகளாக, அந்த வார்த்தைகள் அவன் செவியில் தொனித்தன. தன்னைத் தான் அப் பெண் கேட்கிறாள் என்பதை ராகவன் உணர்ந்து நிச்சயப் படுத்திக் கொள்வதற்கு ஒரு நிமிஷம் ஆயிற்று. அதற்கு அவன் பதில் சொல்லிய பிறகு, ''நீங்கள் விமானத்தில் ஏறிப் பார்க்கப் போகிறீர்களா?'' என்று அப் பெண் கேட்டாள். ''ஆம், அதற்காகத்தான் வந்திருக்கிறேன்'' என்று ராகவன் பளிச்சென்று பதில் சொல்லி, ''நீங்களும் விமானம் ஏறுவதற்காக வந்தீர்களா?'' என்று கேட்டான். ''நீங்கள் முதலில் ஏறிப் போய் விட்டு வந்து எப்படி இருந்தது என்று சொல்லுங்கள்'' என்றாள் அந்தப் பெண்....

ராகவன் ஆகாச விமானத்தில் ஏறி வானத்தில் வட்டமிட்ட போதெல்லாம் அவனுடைய நினைவு மட்டும் பூமியிலேயே சஞ்சரித்துக் கொண் டிருந்தது. சரியாகச் சொல்வதாயிருந்தால், கீழே பூமியில் நின்ற தாரிணியைச் சுற்றிச் சுற்றி அவன் மனம் வட்டமிட்டுக் கொண்டிருந்தது என்று சொல்ல வேண்டும்.

விமானம் இறங்கியதும் ராகவனுடைய கண்கள் அந்த மூன்று பெண்களும் நின்ற இடத்தைத் தேடின. ஒரு கணம் அவர்கள் அங்கு காணப்படாதிருக்கவே அவனுக்கு உலகமே இருண்டு விட்டதாகத் தோன்றிற்று. சற்றுத் தூரத்தில் இன்னோர் இடத்தில் அவர்கள் நிற்பதைப் பார்த்தவுடனே உலகில் மறுபடியும் சூரியன் பிரகாசித்தது. ராகவன் அந்த இடத்தை நோக்கி விரைந்து சென்றான். தாரிணி ஆவல் ததும்பிய முகத்துடனே அவனைப் பார்த்து, ''எப்படி இருந்தது?'' என்று கேட்டாள். ராகவன் தன்னுடைய மனம் பூமியிலே சஞ்சரித்துக் கொண்டிருந்தது என்னும் உண்மையைச் சொல்லாமல் வானப் பிரயாணத்தின் சுகங்களைப் பற்றி, 'அற்புத ரசம்' தோன்ற வர்ணித்தான்.

(பாகம் - 1 ; அத்தியாயம் - 12)

இதுவும் பிறவும் பின்னால் எழுந்த கற்பனை அலைகள். கராச்சிப் பயணத்திலும் காங்கிரஸ் மகாநாட்டிலும் உடனடியாய்க் கருத்தில் பதிந்த எண்ணங்களைக் கல்கி, சென்னைக்குத் திரும்பியதும், ஆனந்த விகடனுக்கு எழுதிக் கொடுத்து விட்டுத் தலையூருக்குப் புறப்பட்டார். புறப்படுவதற்கு முன்னால் அவரிடம் வாசன், ''சீக்கிரமே ஆச்சாரியாரிடம் சொல்லிக் கொண்டு வந்து விடுங்கள்'' என்று மறுபடியும் வற்புறுத்தினார்.

தலையூரில் வேட்டகத்தை அடைந்ததும், எல்லாரும் கல்கியை மகிழ்ச்சி...டம் வரவேற்றார்கள் என்று சொல்ல வேண்டியதே இல்லை. ஆனால், அந்த மகிழ்ச்சியினிடையே, யாரும் ஒரு பேச்சுக்குக் கூட, ''இப்படி ஜெயிலுக்குப் போய் எங்களை வருத்தப்படுத்தலாமா?'' என்று கேட்கவில்லை. அது பற்றிக் கல்கி வியந்து கொண்டிருக்கையில், அவரிடம் ருக்மிணி, தனக்கு ராஜாஜி எழுதியிருந்த கடிதம் ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

காந்தி ஆசிரமம், திருச்செங்கோடு
21-10-'30

ஆசீர்வாதம்.

கிருஷ்ணமூர்த்தி எனக்குப் பின் நல்ல வேலையே செய்தார். சர்க்கார் விடவில்லை. பிடித்துப் போட்டார்கள்.

நீ தைரியமாயும் சந்தோஷமாயும் இருக்க வேண்டும். லக்ஷ்மி எப்படித் தைரியமாயிருக்கிறாளோ அம்மாதிரியே நீயும் இருக்க வேண்டும்.

என்னை மறுபடியும் பிடித்து விடுவார்கள். அதிக நாட்கள் விட மாட்டார்கள். நான் இவ்விடம் வந்து இரண்டு நாள்தான் ஆயிற்று. நாளை மதுரை போவேன். அங்கே சனிக்கிழமை வரையில் இருப்பேன். அதற்குப் பின் லக்ஷ்மியைக் கோயமுத்தூர் கொண்டு போய் விடுவேன். பிறகு, என் விஷயம், நிச்சயமில்லை....

வட நாட்டில் ஸ்திரீகள் எப்படித் தைரியமாய் வேலை செய்து வருகிறார்கள் பாருங்கள். அவர்களும் நம்ம மாதிரிதான்; நம்ம மதம், நம்ம ஜாதிதான். வெள்ளைக்காரர்கள் அல்ல. நீங்களும் தைரியமாயிருங்கள். உனக்கு வேண்டியதற்கு லக்ஷ்மிக்கு எழுது. லக்ஷ்மி விலாசம் ...

பயம், விசனம் வேண்டியதில்லை. கடவுள் எல்லாருக்கும் துணை. பெரிய கௌரவமான போரில் மானமுள்ளவர்கள் எல்லாரும் சேர வேண்டியது. உனக்கு ஒன்றும் குறைவு ஏற்படாது.

இப்படிக்கு,
அண்ணா

''இப்படி அண்ணா எழுதினதால்தான் இவ்வளவு தைரியமா?'' என்று கல்கி கேட்டு விட்டு, மறுபடியும் ஒரு தரம் அக்கடிதத்தைப் படித்துப் பார்த்தார்.

கல்கி குடும்பத்தாருக்கு ''அண்ணா'' எழுதிய முதல் கடிதம் அது. கல்கி தம்பதியர் ஆசிரமத்தில் வசிக்கப் போனதிலிருந்தே, ஆச்சாரியாரை அவர்கள், அவருடைய பெண்டு பிள்ளைகள் கூப்பிட்டது போலவே, ''அண்ணா'' என்று அழைக்கத் தொடங்கினார்கள். பின்னர், கல்கி தம்பதியருக்கு மட்டுமின்றி, அவர்களுடைய குழந்தைகளுக்கும் அவர் அண்ணாவாகவே இருந்தார். (தொடரும்)

## காட்சி 17

(குப்புசாமி வீடு. பாத்திரங்கள்: குப்புசாமி, சீதா, ஆரோக்கியசாமி.)

குப்புசாமி: என்ன ஸார் நினைச்சுக்கிட்டீங்க? ஃபாதர் என் பெண்டாட்டியை மிரட்டி ஸ்டேட்மெண்ட் வாங்கிட்டார்னு நான் சொல்லணுமா? அதும்படிக்கு இப்ப இவ ஒரு ஸ்டேட்மெண்ட் எழுதிக் கொடுக்கணுமா? அது நடக்காது.

சீதா: அதானே! பாதிரி மிரட்டினார்னு நான் சொல்லணுமாம்!

குப்பு: பிளாக்மெயில் பண்ணி லெட்டர் வாங்கிட்டார்னு சொல்லணுமாம். அப்படிப் போலீஸுக்கு ஸ்டேட்மெண்ட் எழுதிக் கொடுக்கணுமாம்! இந்த மாதிரி அநியாயத்துக்கு நாங்க உடந்தையா இருக்க மாட்டோம்.

சீதா: என்னைப் பத்தித் தாறுமாறு பத்திரிகையிலே செய்தி போட வெச்சுட்டு இந்த மாதிரி வந்து கேக்க வெட்கமா இல்லே?

ஆரோக்கியசாமி: கோபப் படாதீங்க. நான்தான் அந்தச் செய்தியைக் கொடுத்தேன்னு நீங்க நெனைக்கிறீங்க. ஆனா அந்தப் பாதிரியாரே நியூஸ் கொடுத்திருக்கலாம், இல்லையா?

குப்பு: உளறுதேய்யா! அவர் நம்மையே சம்பந்தப்படுத்திச் செய்தி கொடுப்பாரா?

ஆரோ: ஒருவேளை உங்க ஒய்ஃப் பயந்து போய் அவர் சொல்றபடியெல்லாம் கேப்பான்னு அவர் நெனைச்சிருக்கலாம். எனக்குத் தெரியலே.

குப்பு: தரித்திரம். பொய் சொன்னாலும் சரியாச் சொல்லத் தெரியணும். ஏன் இப்படி உளர்றே? போய்யா வெளியிலே.

ஆரோ: கொஞ்சம் பொறுமையா இருங்க, மிஸ்டர் குப்புசாமி.

(பேசிக் கொண்டே நாற்காலியில் உட்காருகிறார்.)

குப்பு: எழுந்திருய்யா. நானே நிக்கிறேன். இவன் உட்கார்றான்!

ஆரோ: மிஸ்டர் குப்புசாமி! உங்க குடும்பம் அநாவசியமா கோர்ட்டுக்கு இழுக்கப்படணுமான்னுதான் நான் கவலைப்படறேன்.

சீதா: த்ஸொ... த்ஸொ... அழாதீங்க. நாங்க பார்த்துக்கறோம்.

ஆரோ: அம்மா, நீங்க சாட்சிக் கூண்டிலே ஏறி என் மகனைப் பத்திப் பேசும்போது உங்க குடும்ப கௌரவம் பாதிக்கப்படாதா?

குப்பு: எங்க குடும்ப கௌரவத்துக்கு ஒண்ணும் ஆபத்து வராது. நடந்ததைத்தானே சொல்லப் போறோம்? உன் பையன் பண்ணின தப்பைத்தானே இவ சொல்லப் போறா?

ஆரோ: இருந்தாலும் இவங்களைப் பத்தியும் பேச்சு வரும் இல்லையா?

குப்பு: வராது. வந்தாலும் பரவாயில்லே.

ஆரோ: உண்மையிலே அன்னிக்கு என்ன நடந்தது தெரியுமா? என் பையனுக்குச் சின்ன வயசிலேருந்து காக்கா வலிப்பு. அப்போ கையிலே எது கிடைச்சாலும் இறுகப் பிடிச்சுக்குவான். அன்னிக்கு இவங்க வந்தபோது அவனுக்கு வலிப்பு வந்திருக்குது. இவங்களைக் கெட்டியாப் பிடிச்சுக்கிட்டான். அதைப் போய்...

குப்பு: யோவ்! இந்த மாதிரியே புளுகிக்கினு போனா உனக்கே காக்கா வலிப்பு வந்துடும். யார் கிட்டே கதை விடறே?

ஆரோ: இந்த வழக்கிலே, உன் மனைவி வாக்குமூலம், சாட்சியம் எல்லாம் பயன்பட்டா உங்களுடைய பெண் குழந்தைக்கு உங்க குலத்திலே, நல்ல குலத்திலே கல்யாணம் ஆறதே கஷ்டமாப் போயிடும்.

குப்பு: பரவாயில்லே. அவளுக்குக் கலப்புத் திருமணம் பண்ணி வெச்சு மெடல் வாங்கிடுறோம். என்னய்யா சும்மா பேசிக்கிட்டே போறே? நீ கேக்கிற மாதிரி 'ஃபாதர் மிரட்டினார், ஸ்டேட்மெண்ட் வாங்கினார்' அப்படீன்னு போலீஸுக்கு ஸ்டேட்மெண்ட் எழுதிக் கொடுக்க மாட்டோம். போயிட்டு வாய்யா.

ஆரோ: சரி, மிஸ்டர் குப்புசாமி! நான் வரேன். (போய்த் திரும்பி) நீங்க ஏ. ஜி. ஆஃபீஸிலே ஒரு கிளார்க். நானூறு ரூபா சம்பளம்னு கேள்விப்பட்டேன்.

குப்பு: ஆமா. அது கூட எனக்குத் தெரியாதா? நான் என்ன மடையனா?

சீதா: இரும்பவும் உங்களுக்குச் சந்தேகம் வந்துடுச்சா?

குப்பு: பேசாம இரு. இப்ப என்னய்யா அதுக்கு? நீ எனக்கு மாசம் ஆயிரம் ரூபா தரப் போறியா? மூஞ்சியைப் பாரு! போய்யா!

ஆரோ: மாசம் ஆயிரம் இல்லே, ஐயாயிரம் ரூபா சம்பளத்திலே என் கம்பெனிகள் ஏதாவது ஒண்ணுலே உங்களுக்கு ஜெனரல் மானேஜர் வேலை தர்றேன். மாசம் ஐயாயிரம் ரூபா சம்பளம். அதுக்குப் பதில் உபகாரமா நான் சொன்ன மாதிரி போலீஸுக்கு ஸ்டேட்மெண்டு கொடுத்தால் போதும். நான் உங்களை வேலையிலே சேர்த்துக்கிட்டு என் காரியம் ஆன உடனே வேலையை விட்டு வெளியே அனுப்பிடுவேனோன்னு நீங்க பயப்படலாம். பத்து வருஷம் 'அக்ரிமெண்ட்' போட்டுக்கறேன். அந்தப் பத்து வருஷத்துக்குள்ளே உங்களை வேலையை விட்டு அனுப்பிச்சுட்டா பத்து வருஷ சம்பளம் அதாவது—வருஷம் அறுபது ஆயிரம்; பத்து வருஷத்துக்கு ஆறு லட்சம்—கொடுத்தாத்தான் வெளியே அனுப்ப முடியும்னு ஒப்பந்தத்திலே போட்டுக் கொடுக்கறேன்.... இதோ அந்த மாதிரி ஒப்பந்தம் டைப் பண்ணி என் கையெழுத்துப் போட்டுக் கொண்டு வந்திருக்கேன். நீங்க படிச்சுப் பார்த்துட்டுக் கையெழுத்துப் போடலாம்.

(குப்புசாமி நாற்காலியைத் தள்ளி அவருக்குப் போடுகிறான். சீதா காப்பியை எடுத்துக் கொடுக்கிறாள்.)

என் குடும்ப கௌரவத்தைக் காப்பாத்த நீங்க இந்த உதவியைச் செய்தா இந்தப் பணம் எனக்குப் பெரிச இல்லே. வரி கட்டற துக்குப் பதிலா மாசா மாசம் உங்களுக்குச் சம்பளம். தட் ஈஸ் ஆல்.

குப்பு: சீதா! நீ என்ன நினைக்கிறே?

சீதா: நீங்க என்ன நினைக்கிறீங்க?

குப்பு: இல்லே... ஒருவேளை அந்தப் பாதிரி யாரே அந்தச் செய்தியைக் கொடுத்திருப் பாரோ? உம்...?

சீதா: இருக்கலாம், நமக்கென்ன தெரியும்?

குப்பு: நீ கோர்ட்டுக்குப் போய்ச் சாட்சி சொன்னு நம்ப குடும்ப கௌரவம் கெட்டுப் போகாதா?

சீதா: எப்படிக் கெட்டுப் போகாம இருக் கும்? கெட்டுத்தான் போகும். எனக்கும் தயக்கமாத்தான் இருக்கு.

குப்பு: நம்ம பொண்ணுக்கு நல்ல இடத் துலே கல்யாணம் ஆகுமா?

சீதா: தைரியமா நம்ப வீட்டிலே சம்பந்தம் செய்துப்பாங்களா? கஷ்டம்தான்.

குப்பு: நம்ப பையன் வேறே படிச்சுப் பெரிய ஆளா ஆகணும். நல்ல வேலைக்குப் போகணும்.

சீதா: இந்த மாதிரி கோர்ட், வழக்குன்னு சம்பந்தப்பட்ட குடும்பம்னு நல்ல வேலை கிடைக்குமோ, கிடைக்காதோ?

குப்பு: காக்கா வலிப்பு வந்தா கெட்டியாத் தான் பிடிச்சுப்பாங்க இல்லே?

சீதா: ஆமா, நானே எங்க ஊர்லே பார்த் திருக்கேன். இவர் பையனுக்குப் பாவம் அப் படித்தானோ என்னவோ?

குப்பு: கோர்ட்டிலே நீ சாட்சி சொல்றது நல்லதா?

சீதா: சந்தேகமாத்தான் இருக்கு.

குப்பு: அந்த ஸ்டேட்மெண்ட் கொடுத்தது நல்லதா?

சீதா: சந்தேகமாத்தான் இருக்கு.

குப்பு: இவருக்கு ஸ்டேட்மெண்ட் கொடுக் கறது நல்லதுதானே?

சீதா: சந்தேகமாத்தான் இருக்கு...இல்லே! சந்தேகமே இல்லே!

குப்பு: இப்ப என்ன செய்யலாம்?

ஆரோ: இன்னும் ஒரு விஷயத்தை நினைச் சுப் பாருங்க. இப்ப நான் உங்களுக்கு ஆறு லட்சம் ரூபாய் சம்பாதிக்க ஒரு சந்தர்ப்பம் கொடுத்திருக்கேன். நீங்க உங்க பையனை அமெ ரிக்காவுக்குக் கூட அனுப்பிப் படிக்க வைக்க லாம். உங்க பெண்ணுக்குப் பெரிய இடத்திலே சம்பந்தம் பண்ணி வைக்கலாம். இந்தச் சந்தர்ப்பத்தை வேண்டாம்னு நீங்க சொல் லிட்டா, நீங்க உங்களுக்குக் கிடைக்கிற பணத்தைத் தியாகம் பண்ணிட்டதாக அர்த் தம் ஆகாது. உங்க பிள்ளை, பெண் இவர் களுக்குக் கிடைக்கிற பெரிய வாழ்வை, எதிர் காலத்தை உதறித் தள்ளி அவர்களுக்குத் துரோகம் பண்ணிட்டீங்கன்னுதான் அர்த்தம்!

குப்பு: நம்ப பிள்ளைங்களுக்கு நாம் துரோ கம் செய்யறதா சீதா?

சீதா: சே! சே! என்னாலே அதை நினைச்சுப் பார்க்க முடியலே.

குப்பு: நாம, நமக்காகவா பணத்துக்கு ஆசைப்படறோம்?

சீதா: யாரு சொன்னது? நம்ப பிள்ளைங்க நல்லா இருப்பதை நாம கெடுப்பானேன்னு தான் நினைக்கிறோம்.

குப்பு: ஆமா அப்படித்தான் நினைக்கணும். (ஆரோக்கியசாமியைப் பார்த்து) என்ன ஸ்டேட்மெண்ட் ஸார் கொடுக்கணும்?

ஆரோ: டு த போலீஸ் கமிஷ்னர்...

குப்பு: கொஞ்சம் இருங்க. சீதா! இந்தா பேப்பர், பேனா...

(அதற்குள் சீதாவே பேப்பர் பேனா எடுத்துக் கொண்டு வந்து தயாராயிருக்கிறாள்.)

சீதா: நானே எடுத்துக்கிட்டேன்.



▲ "உம்.... சொல்லுங்க ஸார்! சீதா! நீ எழுது. டு த போலீஸ் கமிஷ்னர்.... ஏன் ஸார், To என்ன ஸ்பெல்லிங்?"



"ரமா நெம்பர் எனக்கு மனப்பாடம். ஃபோன் பண்ணுங்க. 821232."

குப்பு: சொல்லுங்க ஸார்.

ஆரோ: டு த போலீஸ் கமிஷ்னர்...

குப்பு: ஏன் கீதா கை நடுங்குகிறது?

கீதா: ஒண்ணுமில்லே, நம்ம பிள்ளைங்களுக்கு ஒரு நல்ல காரியம் செய்ய ஒரு சந்தர்ப்பம் கிடைச்சுதேன்னு நினைச்சேன்; கை கொஞ்சம் நடுங்குது.

(ஆரோக்கியசாமி ஜாடை காட்ட, குப்புசாமி சுவரில் தொங்கும் தெய்வப் படத்தைத் திருப்பி வைக்கிறார்.)

குப்பு: உம்... சொல்லுங்க ஸார்! கீதா, நீ எழுது! டு த போலீஸ் கமிஷ்னர்.... ஏன் ஸார்! To என்ன ஸ்பெல்லிங்?

## காட்சி 18

(வக்கீல் வீடு. பாத்திரங்கள்: சத்யநாராயணா, பங்கஜம், வெங்கட், ஆரோக்கியசாமி.)

வெங்கட்: அந்த டேப் ரிகார்டர்லே ரிக்கார்ட் பண்ணினது, அந்தம்மா எழுதிக் கொடுத்த 'ஸ்டேட்மெண்ட்' எல்லாத்தையுமா கேக்கறீங்க?

ஆரோக்கியசாமி: ஆமாம்.

வெங்கட்: இந்தக் கேஸை எங்கப்பா ரொம்ப நம்பிக்கிட்டு இருக்காரு. அதனாலே அந்த 'ரிகார்ட்ஸ்' முழுவதும் அவர் இரும்பு பீரோவிலே வெச்சிருக்கார். அதிலேயிருந்து நான் எடுக்கணும்.

ஆரோ: எடுத்துத் தரேன்னு சொன்னியே?

வெங்: எடுத்துத் தரேன்னு சொன்னேன். இப்ப மட்டும் என்ன மாட்டேன்னு சொல்றேன்? அது ரொம்பச் சுலபம் தான். எனக்கு சமயத்திலே கொஞ்சம் பணம் வேணுமின்னு அவர் இரும்புப் பீரோவிலேருந்துதான் எடுப்பேன். மாற்றுச்சாவி வெச்சிருக்கேன். வந்து... அது சரி, எனக்கென்ன பதிலுக்குப் பண்றீங்க? அதைச் சொல்ல மாட்டேங்கறீங்களே?

ஆரோ: நீ என்ன கேட்டாலும் தரேன்னு சொன்னேனே?

வெங்: அதைத் தெளிவாப் பேசிக்கணும். நான் எனக்கு என்னவேணும்னு சொல்றேன். டிட் பூ ஸி பாபி?

ஆரோ: உம்.

வெங்: சரி விடுங்க. ப்ளெய்னு பேசறேன். இந்த இன்டஸ்டிரியலிஸ்ட் சதாசிவம் பெண் ரமா...அவளை எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும். முடியுமா?

ஆரோ: நான் என்ன மாரேஜ் புரோக்கரா?

வெங்: அப்போ நான் என்ன டேப் ரிகார்டர் புரோக்கரா? வியாபாரம்னு வந்துட்டா எதுக்கும்தான் தயாராயிருக்கணும்.

ஆரோ: ஆல்ரைட். அந்தப் பிளாஸ்டிக் ஃபேக்ட்ரி.... வேளச்சேரிக்குப் பக்கத்துலே இருக்கே... அந்தச் சதாசிவம்தானே?

வெங்: அவரே தான்.

ஆரோ: அப்போ சரி. சதாசிவம் கிட்டப் பேசி அவர் பொண்ணு ரமாவை உனக்கே கல்யாணம் பண்ணி வைக்கச் சொல்றேன்.

வெங்: நீங்க சொன்னு அவர் கேப்பாரா?

ஆரோ: என் தொழிற்சாலைகள் சிலதுக்குத் தேவையானவற்றை சப்ளை செய்யறதுனாலே தான் அவர் தொழிற்சாலையே நடக்குது. நான் கொடுக்கிற ஆர்டர்களை வெச்சுத்தான் அவர் பிழைப்பு!

வெங்: நீங்க சொன்னு நிச்சயமா கேட்பாரா?

ஆரோ: நான் ஒரு வார்த்தை சொன்னு அவர் பொண்ணு இல்லே, அவரே உன்னைக் கல்யாணம் பண்ணிக்குவார்!

வெங்: அவர் வேணும் சார்! வயசானவர். அவர் பொண்ணு போதும்!

ஆரோ: சரி, நீ அந்த ரிக்கார்டை எல்லாம் எடுத்துக் கொடு. நான் கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்றேன்.

வெங்: ஹய்யா! இந்த வேலே நம்மகிட்ட நடக்காது! முதல்லே கல்யாணம்! தாலியைக் கட்டும்போதே ரிக்கார்ட்ஸைக் கையிலே வெச்சுக்கறேன். மூணு முடிச்சுப் போட்ட உடனே டக்னு உங்ககிட்டே எல்லாத்தையும் கொடுத்துடறேன்.

ஆரோ: கல்யாணத்தை அவ்வளவு சீக்கிரம் முடிக்க முடியுமா? இந்த ரிக்கார்ட்ஸ் எல்லாம் எனக்கு அர்ஜண்டாத் தேவை. கேஸ் அடுத்த வாரம் வரப் போகுது..

வெங்: அதெல்லாம் எனக்குத் தெரியாது. சரி ஸார், மத்தியஸ்தமாப் போகலாம். கல்யாணத்துக்கு நாள் நிச்சயித்து அழைப்பிதழ் அச்சடிக்கச் சொல்லுங்க. கொடுத்திடறேன்.

ஆரோ: என்னப்பா நீ ரெண்டுங் கெட்டானா இருக்கே?

வெங்: யூ நோ மை ஃபாதர்? வித் ஈஸ் ஆல்ஸோ எ ரெண்டுங் கெட்டான்! எங்கப்பா வரதுக்குள்ளே டக்குனு இங்கேயிருந்து சதாசிவத்துக்கு ஒரு ஃபோன் அடியுங்க.

ஆரோ: ஃபோனிலேயே கல்யாணத்தை நிச்சயம் பண்ணச் சொல்றியா?

வெங்க: வேண்டாம் ஸார். ஃபோன் பண்ணி நேரே வந்து பேசறேன்னு சொல்லுங்க. அப்புறம் நேரே போய் இன்விட்டேஷன் பிரிண்ட் பண்ண ஏற்பாடு செய்யுங்க. அப்புறம் நான் சாட்சியங்களை எடுத்துக் கொடுத்திடறேன். நான் உங்களை நம்பனும்னா இப்பவே ஃபோன் பண்ணுங்க.

ஆரோ: டெலிஃபோன் டைரக்டரி எங்கே?

வெங்: ரமா நம்பர் எனக்கு மனப்பாடம். 821232.

ஆரோ: உம்... என் தலையெழுத்து! உம்... (டயல் செய்கிறார்.) ஹலோ... ஆரோக்கியசாமி பேசறேன். சதாசிவம் இருக்காரா?

சதா (குரல்): சதாசிவம்தான் பேசறேன். என்ன ஸார்? நீங்க போய் எனக்குப் போன் பண்றீங்க? சொல்லியிருந்தால் நான் போன் பண்ணியிருப்பேனே?

ஆரோ: நான் உங்கிட்டே ஒரு முக்கியமான விஷயம் பேசணும்.

சதா: நானே வரேன் ஸார். இன்ஸ்பெக்ட் இன்னிக்கு நானே வரதாத்தான் இருக்கேன். என் பொண்ணு ரமா கல்யாணம் நிச்சயம் ஆயிடுச்சு. நாலு நாள் கழிச்சு மேரேஜ். அழைக்க வரேன் ஸார். மாப்பிள்ளை நம்ம கவர்ன்மெண்டிலே அண்டர் செக்ரட்டரி. கல்யாண முகூர்த்தத்துக்கு மாப்பிள்ளை வராட்டிக்கூட நான் கவலைப்பட மாட்டேன். நீங்க வரலேன்னா ரொம்ப வருத்தமாயிருக்கும்.

ஆரோ: சரி... சரி... உம்...

(ஃபோனை வைக்கிறார்.)

வெங்: என்ன ஸார் என்ன சொன்னார்?

ஆரோ: சதாசிவம் நான் சொன்னாக் கேட்பான். ஆனா கல்யாணத்தை நிறுத்துன்னா நிறுத்துவானா? அந்த மாதிரி அதிர்ச்சியைத் தாங்குவானா?

வெங்: ஏய் மக்கு!... ஐ யாம் ஸாரி... கல்யாணத்தை நிறுத்தச் சொல்லலே. எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கச் சொல்றேன்!

ஆரோ: உம்...

வெங்: என்ன யோசிக்கிறீங்க? ஸார்... ஸார்... அப்பாவும் அம்மாவும் வராங்க. இப்பப் பேசினதை ஒண்ணும் கண்டுக்காதீங்க. நான் வெளியிலே போயிடறேன். அவருக்கு இந்தக் கேஸ் ரொம்ப முக்கியம். அதைக் கொடுத்தேன்னு தெரிஞ்சா அநாவசியமாக் கொலை நடக்கும்.

ஆரோ: உன்னை விலைக்கு வாங்கணும்னு...

வெங்: நான்தான் விலைக்கு வரத் தயாரா இருக்கேனே? பேரம்தான் இன்னும் சரியா முடியலே. நாளைக்குப் பேசுவோம். அப்பா வரார். கண்டுக்காதீங்க. நான் போறேன்.

(போகிறான். சத்யநாராயணா, பங்கஜம் வருகிறார்கள்.)

சத்தியநாராயணா: அடே! ஆரோக்கியசாமி காரு! ரண்டி.

ஆரோ: குட் ஈவினிங் .. மிஸ்டர் சத்தியநாராயணா.

சத்: குட் ஈவினிங். கூசுகோண்டி. பங்கஜமு! இதி நா ஒய்ஃப். ஐ மீன், இதி ஆரோக்கியசாமி, இது நா ஒய்ஃப்.

ஆரோ: நமஸ்காரம்மா.

சத்: ஏமி ஸார்? அப்படிப் பார்க்கறீங்கோ? அதி லவ் மாரேஜ். ஆந்திரப் பிரதேசம், மெட்ராஸ் ஒண்ணு இருந்தப்போ லவ் ஒச்சந்தி. கல்யாணம் ஆயிந்தி. இப்புடு ஆந்திரா மெட்ராஸ் விட்டுப் பிரிஞ்சுபோயிந்தி. டைவோர்ஸ் ஆகணும். ஏமோ ஆகலே. பகவான் தயை லேது...

பங்கஜம்: எப்பவாவது ரெண்டு நிமிஷம் அசடு வழியாம இருக்கக் கூடாதா?

ஆரோ: என்னம்மா இது! இப்படிச் சொல்றீங்க? மெட்ராஸிலே அவர் எவ்வளவு பெரிய லீடிங் லாயர்!

சத்: அதி செப்பண்டி. கூசுகோண்டி கூசுகோ! பங்கஜமு இவருக்குப் பிரசாதம் இல்லே?

(பங்கஜம் பிரசாதத் தட்டு எடுத்து வருகிறாள்.)

சத்: தேங்காய் ஒத்து. வயத்துக் கடுப்பு வரும்.

பங்: வாழைப் பழம்கூட வேண்டாம். உடம்புக்கு நல்லது இல்லே.. காயா இருக்குது. சர்க்கரைப் பொங்கல் சாப்பிடட்டும்.

சத்: டயாபடீஸ் ஒஸ்துந்தி. ஒத்து. வடை.

பங்: வேண்டான்னு, அத்தனையும்...

சத்: கரெக்ட் விபூதி தீஸ்கோண்டி. விபூதி பாக உந்தி. ஃபஸ்ட் கிளாஸ் விபூதி குங்குமம்.

ஆரோ: ஐ யாம் எ கிறிஸ்டியன்.

சத்: கரெக்ட். ஏமி ஒத்து. சரே, ஏமண்டி சமாசாரமு?

ஆரோ: மிஸ்டர் சத்தியநாராயணா! நான் உங்க கிட்டத் தனியாப் பேசணும்.

சத்: பங்கஜம் இருந்தாப் பரவாலேது. அவளும் நானும் ஒகடே. செப்பண்டி.

ஆரோ: இட் ஈஸ் ஆல் ரைட். நீங்க பெரிய வக்கீல். உங்க கிட்ட நேரிடையாப் பேசறது தான் நல்லது. இந்தப் பாதிரியார் வழக்குனாலே என் குடும்பத்துக்கே கெட்ட பேர் வரும்போல இருக்குது.

சத்: கரெக்ட்... கெட்ட பேர் ஒஸ்துந்தி... எந்து கண்டே, உங்க ஸன் அந்தக் கீதா கெட்டிக்கா பிடிச்சக்கோனி... அதி கொஞ்சம் கெட்ட பேர் ஒஸ்துந்தி. ஏமி பங்கஜமு?

பங்: உங்க பிள்ளையாண்டான் என்ன அந்த மாதிரி நடந்துண்டுட்டான்? கொஞ்சம் ஜாக்கிரதையா வளர்க்கக் கூடாதோ? ரொம்ப செல்லம் கொடுத்துப்புட்டேள் போலிருக்கு. எங்க வெங்கட்டைப் பாருங்கோ. இவர் கிழிச்ச கோட்டைத் தாண்ட மாட்டான்.

சத்: கரெக்டு. நானு கிழிச்ச கோடு அவன் தாண்டறது லேது. ஆனா நானு அவன் எங்கே நிக்கிறான் அனி பார்த்துக்கோனி கோடு கிழிக்

# நல்ல வேளை,
# சில பொருட்கள் என்றும் மாறுவதே இல்லை!

பாசத்திலே சிறந்தது தாய்ப்பாசம். துணிகளின் சிறப்பிலே உயர்ந்தது பின்னி. இவை என்றும் மாற்ற மதிப்புள்ளவை. இவை இரண்டுமே இணையற்ற ஒரு ஜோடி என்று நீங்களே ஒப்புக்கொள்வீர்கள்.

காலத்திற்கேற்ற மனப் போக்குள்ள இளம்தாய் கூட விடாப்பிடியாக பின்னி டெரீன் இழைகலந்த துணிகளையே வேண்டுமென்பர். காரணம் பின்னி கடுமையாக உழைத்து, நீங்கள் தரும் பணத்துக்கு ஏற்றதாய் இருப்பவை. இந்த நாட்களில் அவற்றை விரும்பாதவர் யார்.

பின்னி கூட
என்றும்
மாற்ற விரும்பாத
சில பொருட்கள்
உள்ளன!



**பின்னி**

நாகரீகம், அத்துடன் நீடித்தும் உழைப்பவை— **பின்னி** மட்டுமே நயமுடன் இணைத்துத்தர முடியும்!

Interpub BB/54/75 Tam



எங்கள் மகன் செல்வன் A. ராஜசிம்மனுக்கும், திரு G. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் மகன் செல்வி மாலதிக்கும் சென்ற 17-2-75 அன்று ஸ்ரீரங்கத்தில் நடந்த திருமண வைபவத்திற்கும், 20-2-75 அன்று சென்னையில் நடைபெற்ற வரவேற்பிற்கும் நல்வருகை தந்து பரிசுகள் வழங்கி வாழ்த்திய நண்பர்களுக்கும் அன்பர்களுக்கும் மற்றும் வாழ்த்துக்கள் அனுப்பிய யாவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

திரு ஆனந்ததீர்த்தன்
திருமதி ஹேமா ஆனந்ததீர்த்தன்









ருது. அவன் மாடியிலே நின்னு இங்கே கோடு. இங்கே நின்னு வாசல்லே கோடு. வாசல்லே நின்னு கோடு லேது.

ஆரோ: ஏம்மா இப்ப என் மகனைப் பத்திப் பேசணும்? அவன்தான் செத்துட்டானே?

சத்: த்சொ...த்சொ...அதே மீரு பாக்ய வந்துடு. அதிருஷ்டசாலி. மன கொடுக்கு வெங்கட் இங்கே உயிரோடதான் உந்தி.

பங்: வாயை மூடிண்டு இருங்கோ. அசட்டுப் பிசட்டுன்னு உளறுதேங்கோ. அவர் பாவம் பையன் போனதைப் பத்தி வருத்தப் பட்டுண்டிருக்கார்.... ஸார் நீங்க வருத்தப்படாதேள். உங்களுக்கு அதே மாதிரி இன்னொரு பையன் பொறப்பான்.

ஆரோ: என் ஒய்ஃப் இறந்து போய் ரொம்ப நாளாகுதம்மா.

சத்: மீரு பாக்யவந்துடு. அதிருஷ்டசாலி. என் ஒய்ஃப் பங்கஜமு இன்னும் உயிரோடு தான் உந்தி.

பங்: அடாடா! பேசாம இருக்க மாட்டேளா? அவர் பாவம் பெண்டாட்டி செத்துப் போனதைப் பத்திப் பேசறார். வருத்தப் படாதேள். உங்களுக்கு அதே மாதிரி இன்னொரு பெண்டாட்டி கிடைப்பாள்!

சத்: பங்கஜமு! ஏமி இதி? அவரு என்ன இந்த வயசுலே ரெண்டாம் கல்யாணம் பண்ணிக்குவாரா? நீங்க பையன் செத்துப் போனதைப் பத்திக் கவலைப்படாதீங்க. ஆரோக்கியசாமி காரு! ஒரு பிள்ளை தத்து எடுத்துக்கிடுங்க. — அடாப்டட் ஸன் — தத்துமா கொடுக்கு வெங்கட் வேணுமா இஸ்தானு.

ஆரோ: சே...சே... வேண்டாம்!

சத்: இலவசமா இஸ்தானண்டி. டப்பு ஒத்து.

பங்: ஏங்கறேன்! நீங்க வேணும்னு அவருக்குத் தத்துப் போங்க!

சத்: அப்புடு நீவு அவரு மாட்டுப்பொண்ணு ஆவுது. அவரு உனக்கு மாமனாரு ஆவுது. பரவா லேதா?

ஆரோ: மிஸ்டர் சத்யநாராயணு! நான் சீரியஸ் மாட்டர் பேச வந்திருக்கேன். நான் சொல்றதைக் கேக்கறீங்களா?

சத்: செப்பண்டி. ஒன் மினிட். வெங்கட் தத்து ஒத்தா? சரே... சரே... செப்பண்டி.

ஆரோ: உங்களுக்குக் கொஞ்சம் சொன்னாலே புரியும்னு நினைக்கிறேன். இதோ, அருமை நாயகத்திடம் தான் கொடுத்த வாக்குமூலம் கட்டாயப்படுத்தி வாங்கினதுன்னு போலீஸுக்கு எழுதிக் கொடுத்திட்டாங்க.

சத்: உம்... உங்க வேலையா இது? பரவா லேதண்டி. என்னி ஸ்டேட்மெண்ட் காவலேனு அன்னி நீஸ்கோண்டி. என் கிட்ட இருக்கற ரிக்கார்டர் போதும். அதி வெச்சுக் கினி உங்க போலீஸ் கேஸ் சட்னி சேஸ்தானு. மன அந்திரவாள்ளு. கேஸ் கோங்குரா சட்னி சேஸ்தானு.

ஆரோ: அருமை நாயகத்துக்கு நீங்க....

பங்: என்ன ஸார் நீங்க... என்னமோ நீங்க பெத்துப் பேர் வெச்ச மாதிரி அருமை நாயகம் அருமைநாயகம்ங்கறேள். ஃபாதர் அருமைநாயகம்னு சொல்லுங்கோ!

ஆரோ: அவர் இப்ப ப்ரீஸ்ட் இல்லையே?

சத்: ஊர்கே உண்டய்யா. வான்னு ப்ரீஸ்ட். ஈ கேஸ் கோர்ட்லே ஒஸ்தே அப்புடு



உண்மையா?

ஒரு கிலோ தேங்காய் எண்ணெயில் 10 மிளகு (லேசாக நசுக்கியது) 15 துளசி இலை இவற்றைப் போட்டு அரை மணி காய்ச்சி வைத்துக் கொண்டால் நல்ல கூந்தல் வளர்ச்சித் தைலமாக உபயோகிக்கலாம். -ஃபெமீனு - மாலி



வான்னு ப்ரீஸ்ட்தான். நீவு சைத்தான்.. வென்னு. பெத்த ஸ்டேட்மெண்ட் வாங்கிட்டாரு இவரு. அதி ஸைபர் சேஸ்தானு.

ஆரோ: உங்களாலே அது முடியும்னு தெரிஞ்சுதான் நான் உங்க கிட்ட வந்திருக்கேன். உங்க கிட்ட இருக்கிற ரெக்கார்ட்ஸ் எல்லாம் நீங்க எங்கிட்டக் கொடுத்திட்டா நீங்க எவ்வளவு பணம் கேட்டாலும் தரேன்.

சத்: உம்... எவ்வளவு?

ஆரோ: நீங்க கேளுங்க. இதோ பிளாங்க் செக் வெச்சிருக்கேன். என்ன ஃபிகர்? ஒரு லட்சம் போடட்டுமா?

சத்: இரண்டு.

ஆரோ: சரி.

சத்: மூடு... மூடு... மூடு....

ஆரோ. சரி.

சத்: ஏமி சரி? மூடு அண்டே நான் சொன்னது செக் புக் மூடு. தமிள் மூடு. மூடு! நாகு டப்பு ஒத்து.

ஆரோ: ஸார், நீங்க யார் பேர்லே எவ்வளவு பணம் வேணுமோ இந்தச் செக்லே நீங்களா எழுதிக்குங்க.

(சத்யநாராயணு செக் புத்தகத்தை வாங்கி எழுதுகிறார். அதை ஆரோக்கியசாமி வாங்கிப் படிக்கிறார்.)

ஆரோ: பே ப்ளடி ஃபூல்.

சத்: அவுனு. யாராவது ப்ளடி ஃபூல் அகப்பட்டா வானுக்கு ஈ செக் கொடு. போய்யா. பெத்த டப்பு! எவனுக்குக் காவலா நீ டப்பு? வென்னு பைட வென்னு!

பங்: இங்கிலீஷ்லே சொல்லுங்கோ. அவருக்குத் தெலுங்கு புரியலே.

சத்: ஐ ஸே யூ கெட் அவுட். அவருக்கு இங்கிலீஷூம் புரியலே போலிருக்கு! ஈ கேஸ் நடந்தா நேனு அட்வகேட் ஜெனரலாக சான்ஸ் உந்தி. அதே நான் லைஃப் ஆம்பிஷன். தெலுஸா?

பங்: பணம் இன்னிக்கு வரும்; நாளைக்குப் போகும்.

சத்: அது அந்தக் காலமு. இந்தக் காலமுலோ பணம் இன்னிக்கு வந்தா இன்னிக்கே, இல்லே, நேத்திக்கே போவுது! அட்வகேட் ஜெனரல் அப்பாய்ண்ட்மெண்ட் அடுத்த மாசம் வரப்போகுது. லிஸ்ட்லோ நா பேரு கூட உந்தி. ஈ கேஸுக்கப்புறம் நாகு நல்ல சான்ஸ் உந்தி.

பங்: நான் அட்வகேட் ஜெனரல் பெண்டாட்டி ஆனாலும் ஆயிடுவேன்.

சத்: நேனு அட்வகேட் ஜெனரல் பெண்டாண்டிக்கு ஹஸ்பெண்டு அவுதானு...... வென்னு! (தொடரும்)

தலைவர் தரிசனம்-1

# ஜி. கே. சுந்தரம்

## சொல்பவர்: வி. எஸ். ஸ்ரீகுமார்



◀ தலைவரிடம் குனிந்து ஆலோசனை கேட்கும் திரு ஸ்ரீகுமார்.

“…டத்தில் ஒரு நவீன நூற்புத் தொழிற்சாலை. ஒரு சிறு தகராறைக் காரணமாகக் கொண்டு அந்தக் கட்டிடத்தின் கண்ணாடி ஜன்னல்கள் நொறுக்கப்பட்டன. கல் வீசியவர் தம் தவற்றை உணர்ந்து மன்னிப்புக் கேட்க முன்வந்தால் விவகாரத்தை அத்துடன் முடித்துவிடுவதாக நிர்வாகம் அறிவித்தது. ஆனால் தவறு செய்தவருக்குத் தைரியக் குறைச்சல். சும்மா இருந்துவிட்டார்.

விளைவு: தொழிற்சாலை மூடப்பட்டது. உற்பத்திக் குறைவினால் வியாபார நஷ்டம் ஏற்படும் என்பதும், தொழிலாளர்கள் பட்டினி கிடக்க நேரிடும் என்பதும் தொழிற்சாலை நடத்துபவர்களுக்குத் தெரியாத விஷயமில்லை. ஆனாலும் அவர்கள் தொழிலாளர்கள் தங்கள் கடமை உணர்ச்சிக்கும் கட்டுப்பாட்டு உணர்ச்சிக்கும் அதிக முக்கியத்துவம் கொடுப்பவர்களாக இருக்க வேண்டும் என்று விரும்பினார்கள்.

சில தினங்களில், தவறு செய்த தொழிலாளி தன் மன உறுத்தலைத் தாங்காமல், தன் குற்றத்தை ஒப்புக்கொள்ள முன்வந்தான். தான் குடி போதையில் கற்களை வீசியதாக ஒப்புக் கொண்டான். அந்தத் தொழிற்சாலையின் கதவுகள் மீண்டும் திறக்கப்பட்டன.

நூற்பாலையின் அதிபர் அந்தக் குற்றவாளிக்கு அளித்த தண்டனை விநோதமானது. ''நீ இன்றிலிருந்து பத்து நாட்கள் தக்க துணையுடன் கள்ளுக் கடைக்குப் போய் அங்கே உட்கார்ந்திருக்க வேண்டும். ஆனால் குடிக்காமல் வீடு திரும்ப வேண்டும்'' என்பது தான் அந்த மில் அதிபர் விதித்த தண்டனை! அந்த மில் அதிபர் தான் திரு ஜி. கே. சுந்தரம்.

மனிதன் சபலத்துக்கு அடிமையாகக்கூடாதென்பதற்காக மனத்தத்துவ ரீதியில் அவர் அந்தத் தண்டனையை விதித்து, அந்தத் தொழிலாளிக்கு மறுவாழ்வு கொடுத்ததோடல்லாமல், அவன் குடும்பத்தில் தமக்குள்ள அக்கறையையும் வெளிப்படுத்தினார்.

'மனிதன் இயற்கையிலேயே கெட்டவன் இல்லை. சந்தர்ப்பங்களினால் கெட்டவனாகிறான்' என்ற வாதத்தில் தீவிர நம்பிக்கை உள்ளவர் இவர். தமக்குச் சொந்தமான பல ஸ்தாபனங்களில் பணி புரியும் எவரையும் வேலையிலிருந்து நீக்கியதில்லை. தவறு செய்தவர்கள் நிச்சயம் அதை உணர்ந்து இருந்துவார்கள் என்ற நம்பிக்கைதான் காரணம்.

ஊழியர்கள் தெரிந்தோ தெரியாமலோ செய்யும் தவறுகளுக்கு எஜமானர்கள் பொறுப்பில்லை என்று ஒதுங்கும் சுபாவம் இவரிடம் கிடையாது. இரண்டாம் உலகப் போர் நடந்த வேளையில் நூல் விநியோகத்துக்கு ஏகப்பட்ட கட்டுப்பாடுகள். கோவை லக்ஷ்மி மில்லில் பணியாற்றிய குமாஸ்தா ஒரு சிறு தவற்றுக்குக் காரணமாக இருந்து விட்டார். அரசாங்கம் வழக்குத் தொடர ஏற்பாடு செய்துவிட்டது. கலெக்டரைக் கண்டு பேசிச் சமரசம் செய்து வழக்கைத் தவிர்க்கும்படி சுந்தரத்திடம் நண்பர்கள் யோசனை சொன்னார்கள். சுந்தரம் மறுத்து விட்டார். வழக்கு நடந்து அதன் தீர்ப்புக்கும் கட்டுப்பட்டார்!

சுந்தரம் அவர்களின் குடும்பம் தேசியப் பற்று மிகுந்த குடும்பம். இவர் தந்தை குப்புசாமி நாயுடு அவர்கள் சிறந்த தேசபக்தர். 1930ம் ஆண்டில் காந்திஜி உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்கியபோது, தமிழ்நாட்டில் குப்புசாமி நாயுடு அவர்களும் அந்த இயக்கத்தில் பங்குகொள்ள விரும்பினார். ஆனால் குடும்பத்தினர் அந்த நாளைய பிரிட்டிஷ் அரசாங்க அடக்குமுறைகளுக்கு அந்த முதியவர் ஆளாவதை விரும்பவில்லை. ஆனால், பெரியவரோ தம் குடும்பத்தில் ஒருவராவது அந்த இயக்கத்தில் பங்கு கொள்ள வேண்டுமென்று விரும்பினார். பதினாறே வயதுடைய அவருடைய குமாரர் தந்தையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முன்வந்தார். உப்புச் சத்தியாக்கிரகம் சுந்தரத்துக்கு ஆறு மாத சிறைத் தண்டனையை



ஏரி [illegible] பார்த்தால் [illegible] நிறைய [illegible] இருக்கும். அது எந்த இடம்?
விடை : வா. துருவன். ஜெ.எஸ். -பாலி

வாங்கிக் கொடுத்தது. அவருடைய படிப்பு தடைப் பட்டது.

காந்தி இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டதைத் தொடர்ந்து சுந்தரம் தம் மேற்படிப்புக்கு இங்கிலாந்துக்குச் சென்றார். நான்கைந்து ஆண்டுகள் அங்கே தங்கி நெசவுத் தொழில் நுணுக்கங்களைக் கற்றுத் திரும்பினார். குடும்ப நிறுவனமாகிய லட்சுமி மில்லில் பங்குதாரராகவும், மானேஜராகவும் பணியாற்ற ஆரம்பித்தார்.

தொழில் நிர்வாகத்தில் அக்கறை காட்ட ஆரம்பித்திருந்த நேரத்தில் காங்கிரஸ் ஸ்தாபனம் அவரைப் பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்க விரும்பியது. ஆனால் அவர் அதில் ஆர்வம் காட்டவில்லை. தம்மை அரசியலில் ஈடுபடுத்திக் கொள்ளவும் விரும்பவில்லை.

ஆனால் 1959ம் ஆண்டில் ராஜாஜி அவர்கள் 'சுதந்திரா'க் கட்சியைத் தொடங்கிவிட்டார் என்ற செய்தியை சுந்தரம் வெளி நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருக்கையில் கேள்விப்பட்டார். உடனே ஒரு நண்பர் மூலம் தாம் சுதந்திராக் கட்சியில் சேர்ந்துவிட்டதாக ராஜாஜி அவர்களுக்குச் செய்தி அனுப்பினார்.

ராஜாஜி அவர்களிடம் சுந்தரத்துக்கு அபரிமிதமான பக்தி. ராஜாஜியின் மறைவுக்குப் பிறகு கட்சி தொடர்ந்து இயங்குமா என்று பலருக்கு ஐயப்பாடு எழுந்தபோது, சுந்தரம் உறுதியுடன் அந்தக் கட்சியைத் தொடர்ந்து நிலைநிறுத்தப் பொறுப்பேற்றுக் கொண்டார்.

ராஜாஜி அவர்கள் ஞாபகார்த்தமாகச் சில நல்ல திட்டங்களை நிறைவேற்றச் சமீபத்தில் நடந்த சுந்தரம் அவர்களின் அறுபதாவது பிறந்தநாளை ஒட்டி ஒரு குழுவே உருவாயிற்று.

காஞ்சிப் பெரியவரிடம் சுந்தரத்துக்கு ஈடுபாடு அதிகம். சமீபத்தில் ஆசாரிய சுவாமிகளைச் சந்தித்தபோது அவருடைய விருப்பத்தைச் சுந்தரத்தால் அறிக்க முடிந்தது. அதன் விளைவாகச் சென்னை அடையாற்றில் உருவாகிக் கொண்டு வரும் மகாலட்சுமி ஆலயத்துக்குச் சுந்தரம் குடும்பத்தினர் பெரும் செலவில் மூலஸ்தானத்தையே நிர்மாணித்துக் கொடுக்கவிருக்கிறார்கள்.

சமூக சேவையிலும் சுந்தரம் சளைத்தவர் இல்லை. தந்தையார் குப்புசாமி நாயுடு அவர்கள் ஞாபகார்த்தமாகக் கோவையில் ஒரு முதல்தரமான ஆஸ்பத்திரியை நிர்மாணித்து அது தரமான முறையில் நடக்க ஏற்பாடு செய்திருக்கிறார். அடிக்கடி ஆஸ்பத்திரிக்குப் போய் நோயாளிகளைச் சந்தித்து உடல் நலம் விசாரிப்பார். சில பள்ளிக்கூடங்களும் இவரால் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன.

1962ம் ஆண்டு தேர்தலில் சுந்தரம் சுதந்திரா கட்சியின் சார்பில் பாராளுமன்றத்துக்கு வேட்பாளராக நின்றார். தேர்தல் காலத்தில் ஓட்டுக்களை எப்படியெல்லாம் சேகரிக்க வேண்டும் என்று நண்பர்கள் அவருக்கு எத்தனையோ யோசனைகள் சொன்னார்கள். ஹூஹூம்! மனச்சாட்சிக்கு விரோதமாக அவர் நடந்து கொள்ளத் தயாராக இல்லை. விளைவு! தேர்தலில் தோல்வி. அதை அவர் பொருட்படுத்தவும் இல்லை.

ஆனால் 1964ல் ராஜ்யசபைத் தேர்தலுக்கு நின்று வெற்றி பெற்றார். சுபாவத்தில் அதிகம் பேச மாட்டார். அப்படிப் பேசினாலும் ஆராய்ந்துதான் பேசுவார். சொல்வதை நிதானமாகத் தாழ்ந்த குரலில்தான் சொல்லுவார். ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் மத்தியில் 'சுந்தர நாயக்கர்' என்றால் அலாதி அன்பு உணர்ச்சி பொங்கி எழுவதைக் காணலாம். அதே சமயத்தில் அவர்களிடம் வேலை வாங்குவதிலும் கண்டிப்பானவர்.

தமிழ் இலக்கியத்தில் நிறைய ஆர்வம் காட்டுவார். கோவை கம்பன் கழகத்தின் தலைவர். காரைக்குடி கம்பன் நிறுவனத்திலும் பொறுப்பு உண்டு. கோவை, பாரதீய வித்யா பவனத்தின் கிளைக்கும் இவர் தான் தலைவர்.

விளையாட்டுக்களிலும் இவர் அக்கறை காட்டுவார். ஹாக்கி, டேபிள் டென்னிஸ் போன்ற ஆட்டங்கள் இவருக்குப் பிடித்தமானவை.

சகோதரர்களிடையே பாகப் பிரிவினையான குடும்பந்தான். ஆனாலும் பரஸ்பரம் ஒவ்வொருவருடைய அபிப்பிராயத்தைக் கேட்டு மதித்து நடக்கும் பண்பு பெற்றவர்கள். எல்லாவற்றிலுமே கூட்டுக் குடும்பம்போலத்தான் இணைந்து செயலாற்றுவார்கள்.

சுந்தரம் அவர்களிடம் மிகவும் அபிமானம் கொண்டிருந்த நெருங்கிய உறவினர் ஒருவர் காலமானபோது தம்முடைய ஏராளமான ஆஸ்திகளை சுந்தரம் அவர்களுக்கே உயில் எழுதி வைத்திருப்பது தெரிய வந்தது. இவ்விஷயம் சுந்தரத்துக்கே மிகுந்த ஆச்சரியமாக இருந்தது.

தம் சகோதரர்களை அழைத்தார். "இந்தச் சொத்துக்கள் எல்லாம் எனக்கு மாத்திரம்தான் என்று நான் நினைக்கவில்லை. நம் எல்லோருக்கும் சேர வேண்டியது என்றே கருதுகிறேன். ஆகவே நம் குடும்பச் சொத்தைப் பங்கு போட்டது போலவே இதையும் செய்ய ஏற்பாடு செய்யுங்கள்" என்று சொல்லிவிட்டார். அப்படியே நடந்தது.

சுந்தரத்தின் நிறுவனங்கள் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு நல்ல பணி செய்கின்றன. அன்னியச் செலாவணிக்கு வழி வகுக்கின்றன. இந்த நிறுவனங்களை 'எப்படியாவது' நடத்தலாம் என்ற எண்ணம் இல்லாமல், 'இப்படித்தான்' நடத்த வேண்டும் என்ற லட்சியத்தைக் கடைப்பிடித்துத் தொழில் துறையில் நிமிர்ந்து நிற்பவர் திரு சுந்தரம்.

கேட்டு எழுதியவர்: **கோமதிஸ்வாமிநாதன்**

அவள் மென்மையானவள்...
அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள்,
உறுதியானவள்...
தீப்போன்றவள் அவள்
பெண்மையே உருவானவள்

பட்டுப்போன்ற டால்க்... அன்னைப் போல மிருதுவானது. உங்களை மேனியைத் தழுவி அரவணைப்பது. உங்களை மோகன லாகிரியில் ஆழ்த்தும் அருமையான புது நறுமணம் கொண்டது. ஹேலோவிற்கெனவே பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம் நீண்ட நேரம் உங்களைத் தழுவி உங்களைச் சுற்றி கமகமவென வீசிக் கொண்டிருக்கும். அதுவே உங்கள் வெய்ல் ஆ:ப் லவ். ஹேலோ மட்டுமே அளிப்பது.

ஹேலோ
வெய்ல் ஆ:ப் லவ்
டால்க்




**தனிச் சலுகை**
எகானமி சைஸ் டப்பா ஒவ்வொன்றுக்கும
**ரூ.1.50**
விலையில் தள்ளுபடி

புள்ளியிட்ட கோட்டினூடே வெட்டவும்.

பக்கத்திலுள்ள கூப்பனை வெட்டி எடுங்கள் அதில் உங்கள் பெயரையும், முகவரியையும் ஆங்கிலத்தில் பூர்த்தி செய்து, கூப்பனில் உள்ள முகவரிக்கு போஸ்ட் செய்யுங்கள். (தபாலில் அனுப்புங்கள்) உங்களுக்கு ஒரு விசேஷ தள்ளுபடிச் சீட்டு அனுப்பப்படும். அந்தச் சீட்டை உங்கள் டீலரிடம் கொடுங்கள். அவர் பட்டியல் விலையைவிட ரூ. 1.50 குறைந்த விலையில் ஹேலோ வெய்ல் ஆ:ப் லவ் டாலக் எகானமி சைஸ் டப்பா ஒன்று கொடுப்பார். இந்த விசேஷ சலுகை குறுகிய காலத்திற்கு மட்டுமே உண்டு. எனவே முந்துங்கள். இன்றே கூப்பனை தபாலில் சேருங்கள்.

COUPON

K

To
Halo Veil of Love Talc D. O.
C/o Colgate-Palmolive (India) Pvt. Ltd.
12-A Ritchie Street, Madras 600 002.

Dear Sirs,
I would like to have my Halo Veil of Love Talc discount voucher sent to :

Name ____________________

Address ____________________

____________________



HT.G.2 TM

# ரோமங்களின் ரோஷம்

இப்போதெல்லாம் பத்திரிகைகளில் எங்களைப் பற்றி அடிக்கடி செய்தி வருகிறது. இந்தியன் ஏர்லைன்ஸ் ஸ்தாபனத்தைச்சேர்ந்த சிப்பந்திகள் தங்கள் தலை ரோமத்தைப் பிடரிக்குக் கீழே தொங்கும்படி வளர்த்துக் கொண்டிருப்பதையும், கன்னங்களில் நீண்ட, அகலமான கிருதா வைத்துக் கொண்டிருப்பதையும் பார்க்கும் விமானப் பயணிகள் வெறுப்பும், மனவேதனையும் அடைகிறார்கள்; ஆகையால் அவர்கள் அப்படி வளர்த்துக் கொண்டிருப்பதை இனி அனுமதிக்க முடியாது என்று சென்ற மாதம் சென்னை விமான நிலைய அதிகாரிகள் ஒரு சுற்றறிக்கை விட்டனர்.

தமிழ் நாடு ஸலூன் சொந்தக்காரர்களும், அதில் பணிபுரியும் சிகை அலங்காரக் கலைஞர்களும், சில வாரங்களுக்கு முன்னால் முதல்வருக்கு அனுப்பிக் கொண்டுள்ள ஒரு மகஜரில், இன்று இளைஞர்களும், வயதானவர்களும்கூடத் தலைமுடி வெட்டிக் கொள்வதை நிறுத்திவிட்டதால் தங்கள் தொழில் படுத்து விட்டதென்றும், கூடிய சீக்கிரத்தில் ஸலூன்களை மூடிவிட நேரும் என்றும், நெருக்கடியைத் தவிர்க்க முதல்வர் ஆவன செய்ய வேண்டும் என்றும் கோரியிருக்கின்றனர்.

இன்றைய ரோம வளர்ப்புக் கலையைப் பற்றிய பழைய சரித்திரம் கொஞ்சம் பார்ப்போம் :

நவநாகரிக உலகில் மனிதன் எங்களைப் பிடரி வரையில் வளர்த்துக் கொள்வதும், மீசை கிருதா வளர்த்துக் கொள்வதும் 1963ல் பிரிட்டனில் ஏற்பட்டது. பீட்டல்ஸ் இளைஞர்கள் மேடையில்ஏறிய போது. அவர்கள்தான் ரோம வளர்ப்புக் கலை பிதாக்கள்.

பிரிட்டிஷ் இளைஞர்களை அந்த ரோம வளர்ப்பு மோகம் பலமாகப் பிடித்துக் கொண்டு விட்டது. சில தொழிலதிபர்கள் தங்கள் சிப்பந்திகளும், தொழிலாளர்களும் அப்படி வளர்த்துக் கொள்ளக் கூடாது என்று கண்டித்தனர். சர்வகலாசாலைத் தலைவர்கள் மாணவர்கள் அப்படி வளர்க்கக் கூடாதென்று போதித்தனர். ஆனால் யாரும் எச்சரிக்கைகளையோ போதனைகளையோ பொருட்படுத்தவில்லை.

சில வருடங்கள் முன்னர் 'ஹிப்பிக்கள்' என்ற அழுக்குப் படிந்த, சோம்பேறி வேதாந்திகள் கிளம்பி ரோம வளர்ப்புக் கலையைத் தீவிரமாக்கினர்.

ரோம வளர்ப்பு மோகம் ஒருபுறம் இருக்க வழுக்கை விழுந்தவர்களுக்கு என்னதான் பாடுபட்டாலும் வளர மாட்டேன் என்கிறது.



நாங்கள் மனிதனது தலையில் சராசரி 1,40,000 பேர் இருக்கிறோமாம். கிட்டத்தட்ட அத்தனை எண்ணிக்கையில் ரோமம் வளர்ப்பது பற்றிய யோசனைகளும் உள்ளன! ஆனால் எதுவுமே பலன் தருவதில்லை. வழுக்கை விழாத தலைகளில் நாங்கள் இரண்டரை மாதங்களுக்கு ஓர் அங்குலம் விதம் வளர்கிறோமாம். எங்களை அகற்றுவதில் மட்டும் மனிதனின் வாழ்நாளில் இரண்டு சதவிகிதம் பொழுது வீணாகிறது.

சில தேசங்களில் பிடரி வரை ரோமம் வளர்ப்பதையும், கிருதா வைத்துக் கொள்வதையும் சட்டப்படி கூடத் தடை செய்திருக்கிறார்கள். சமீபத்தில் மலேஷியா அரசாங்கம் அந்த கைய தடை உத்தரவை வெளியிட்டது. சில மாதங்களுக்குமுன்னர் வடஇந்தியாவில் ஒரு நகரத்தில் உள்ள பள்ளிக்கூட மாணவர்களின் கிருதாக்கள், பிடரி மயிர்களை அவர்களின் தந்தைமார்களே வெட்டிவிட்டார்களாம்! சில வருடங்களுக்கு முன்னர் பிலடெல்பியா என்ற அமெரிக்க நகரில் சமூக நல ஊழியரான ஒருவர், பிடரி மயிர் கிருதா மீசை, தாடி ஆகியவற்றோடு அலங்கார புருஷராக இருந்ததற்காக வேலையிலிருந்தும் சஸ்பெண்ட் செய்யப்பட்டார். அவர் இதை ஆட்சேபித்து வழக்குத் தொடுத்தார். நீதிபதி, ''ஒருவர் தம் இஷ்டப்படி ரோமம் வளர்த்துக் கொள்ள உரிமை உண்டு. அப்படி வளர்ப்பதனால் தீமை ஏற்படும் என்று எண்ணி அதைத் தடை செய்வதற்கில்லை'' என்று தீர்ப்பு அளித்தார்.

எங்கள் விஷயம் இப்படிச் சந்தி சிரிப்பதால் எங்களுக்குக் கோபம் உண்டாகிறது. எங்களது ரோம வளர்ப்பு ஒழிப்பு யோசனை இது:

இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர் ரஷ்ய பீட்டர் சக்கரவர்த்தி தாடி, மீசை வளர்த்துக் கொள்பவர்களுக்குத் தலா நூறு ரூபிள் வரி விதித்தாராம். அது போன்று வரி விதித்தால் கிருதா, பிடரி வரை கேசம் எல்லாம் மாயமாய் மறையும். அப்படி மறையாது போனாலும் அரசுக்குச் சில கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும்! —**அநாமதேயம்**



# தங்கள் மூளையைப்பயன்படுத்தி பணிபுரி வோருக்கு பிரிங்கால் மகாபிரிங்கராஜ் கூந்தல் தைலம்

## ஆயுர்வேத முறைப்படி வெற்றிகர மாக தயாரித்த பிரிங்கால் உங்கள் கபாலத்திற்கு குளிர்ச்சி தருகிறது




கபாலத்தை குளிர்ச்சியாக வைத்திருக்க மிகச் சிறந்தது. மகாபிரிங்கராஜ் கூந்தல் தைலம் என்று பல்லாண்டுகளாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஆயுர்வேத முறைப்படி மிக கண்டிப்பான முறையில் தயாரித்த அதில் டில் ஆயில், பிரிங்கராஜ் பச்சிலை சத்து, மற்றும் 12 ஆயுர்வேத மருந்துகள் சேர்ந்துள்ளன. இவை அனைத்தும் உங்கள் கபாலத்தை குளிர்ச்சியாக வைத்திருக்கின்றன. குளிப்பதற்கு முன்னால்-அல்லது பின்னால் பிரிங்கால் கூந்தல் தைலத்தை உங்கள் கூந்தலில் தினசரி அழுத்தி தேய்க்கவும். அது உங்களுக்கு குளிர்ச்சியைக் கொடுத்து அயர்ச்சியைப்போக்கும். சுகமாக தூங்க உதவும். உங்கள் கூந்தலை பளபளப்பாகவும், ஆரோக்கியமாகவும விளங்கச் செய்யும்.

**பிரிங்கால்** மகாபிரிங்கராஜ் கூந்தல் தைலம் ஒரு கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

CTC.14 TAM

# ஓகோ!

-தராஜா-

"இன்டர்வியூவுக்கு எத்தனை பேர் வந்திருக்கிறார்கள்?" என்று கேட்டார் கோவிந்தா அண்ட் கம்பெனியின் முதலாளியான கோவிந்தன் தம் மானேஜரிடம்.

"மொத்தம் ஆறு பேர்."

"நீங்கள் டெஸ்ட் கிஸ்ட் ஏதாவது வைத்துப் பார்த்தீர்களா?"

"இல்லையே! நீங்களே புது முறையில் எல்லோரையும் டெஸ்ட் பண்ணப் போவதாகச் சொன்னீர்களே!"

"சரி. ஒவ்வொருத்தராக அனுப்பி வையுங்கள்!"



முதலாளி கோவிந்தன் எல்லோரிடமும் ஒரே ஒரு கேள்விதான் கேட்டார். "ஜவ்வரிசி எந்தச் செடி—கொடி அல்லது மரத்திலிருந்து கிடைக்கிறது?"

எல்லோருமே இந்தக் கேள்விக்கு "ஜவ்வரிசி மரவள்ளிக் கிழங்கு மாவிலிருந்து செயற்கையாகத்தான் தயாரிக்கப் படுகிறது. அது இயற்கையாக விளைவதில்லை" என்று சரியான விடையைச் சொல்லி விட்டார்கள்.

கோவிந்தனுக்கு ஆச்சரியமான ஆச்சரியம்! 'எப்படி எல்லோருமே கரெக்டாகச் சொல்லிவிட்டார்கள்' என்று! மானேஜர் முகுந்தராவ்தான் முதலாளி இந்தக் கேள்வியைத்தான் கேட்பார் என்று யூகித்து விடையைச் சொல்லிக் கொடுத்து அனுப்பியிருந்தார் என்பது அவருக்குத் தெரியாது!

"இன்னொரு தரம் ஒவ்வொருவராக உள்ளே அனுப்புங்கள்!" என்று உத்தரவு போட்டார் முதலாளி கோவிந்தன்.

முதலில் வந்த ஆசாமியிடம், "என் சாமர்த்தியம் எப்படி என்று பார்க்கப் போகிறேன். என் மச்சினனுக்கு 'இன்டேன்' காஸ்—புது கனெக்ஷன் — வாங்கிக் கொடுத்தாக வேண்டும்!" என்றார்.

"முயற்சி பண்ணுகிறேன், சார்!" என்று சொல்லிவிட்டுப் போனான் அந்த ஆள்.

இரண்டாவது ஆளிடம், "வியாழக்கிழமை யன்று என் மாமா பிள்ளை கிராண்ட் டிரங்கில் டெல்லி போவதற்கு டூ-டயர் டிக்கெட் ஒன்று வாங்கி வா பார்க்கலாம்!" என்று வேலை வைத்தார்.

மூன்றாவது நபரிடம், "கலப்படமில்லாத சிமென்ட் ஒரு டன் அவசரமாகத் தேவைப்படுகிறது. கன்ட்ரோல் விலைக்கு மேல் காலணா தரமாட்டேன். நாளைக்குள் வந்தாக வேண்டும்!" என்று சொல்லி விரட்டினார்.

நான்காவது ஆசாமி உள்ளே வந்தான். அவனிடம் "நாளைய வெள்ளிக்கிழமை எம்.ஜி.ஆர். படம் ஒன்று புதிதாக வெளியாகிறது. முதல் நாள் மாட்னி ஷோவுக்கு முதல் வகுப்பு டிக்கெட் ஆறு வேண்டும் எனக்கு. 'பிளாக்'கில் வாங்கக் கூடாது!" என்று பணத்தைக் கொடுத்து அனுப்பி வைத்தார்.

முதல் நான்கு பேர்வழிகளும் முதலாளியின் அறையிலிருந்து வெளி வந்தவுடன் அவர்களுக்கு என்னென்ன வேலைகள் கொடுத்திருக்கிறார் என்று கேட்டுத் தெரிந்து கொண்ட உடனேயே ஐந்தாவது ஆசாமிக்குப் பயம் பிடித்துவிட்டது. நழுவி விட்டான்.

ஆறாவது பேர்வழிக்கு ஒரு காகிதத்தை எடுத்து அதில் மளமளவென்று சில எண்களை எழுதினார் கோவிந்தன். "இந்தா இதைக் கூட்டல் போட்டுக் கொண்டு வா!" என்று நீட்டினார்.

"எப்போசார் வேண்டும்?"

"கொடேன், நாளைச் சாயந்தரத்துக்குள்!"

மறு நாளுக்கு மறு நாள்.

"என்னய்யா ஆறுன்கள் இண்டர்வியூவுக்கு வந்த ஆசாமிகள்?" என்றுமானேஜரைக் கேட்டார் கோவிந்தன்.

"எல்லாருமே ஜமாய்த்து விட்டார்கள் ஸார். உங்கள் மச்சினருக்கு காஸ் சப்ளை கிடைத்து விட்டது! எடுத்த எடுப்பிலேயே இரண்டு சிலிண்டர் வாங்கி விட்டான் அந்த முதல் ஆசாமி!"

"வெரி குட்!.... டெல்லி டிக்கெட்?"

"வந்து விட்டதே! நீங்கள் கேட்டபடியே டூ-டயர்!"

"அச்சா!..... ஆமாம், சிமெண்ட மூட்டை?"

"நேற்று சாயந்திரமே நம்முடைய 'கோடவுனி'ல்வந்து இறங்கியாகி விட்டது சார்! நல்ல சுத்தமான சரக்கு..."

"பேஷ்! பேஷ்!"

"எம். ஜி. ஆர். படத்துக்கு டிக்கெட் கேட்டிருந்தீர்களாமே! அதுவும் வந்து விட்டது!...!"

"நமக்கு ஆக வேண்டிய காரியங்களைச் சாதித்துக் கொண்டாயிற்று. ஆமாம், கூட்டல் கணக்குப் போடச் சொன்னேனே அந்த ஆள் சமாசாரம் என்ன?"

"அதை ஏன் கேட்கிறீர்கள்? நாலு விடை எழுதியிருக்கிறான்! நாலும் தப்பு!"

"அது கிடக்கட்டும் ஐயா! அந்த ஆளையே உதவி மானேஜராக 'அப்பாயிண்ட்' பண்ணி விடுங்கள்!"

மானேஜர் வாயைப் பிளந்தார். "என்னசார் இது...?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை, ஐயா... அவன்தான் என் மாப்பிள்ளை! லவ் பண்ணித் தொலைச்சுட்டான். வேலை போட்டுக் கொடுத்துக் கௌரவமாய் வாழ வழி செய்ய வேண்டாமா?" என்றார் முதலாளி கோவிந்தன்!

(முக்கிய குறிப்பு: மாப்பிள்ளைகளைக் கண்டால் அவ்வளவாகப் பிடிக்காத மாமனார் ஒருவர் எழுதிய கதை இது!)

இப்போது வருகிறது...

# அதிக சிக்கனமான

# பிஜ்!

## லாபமளிப்பதில் மற்றெல்லா துப்புரவு பவுடர்களையும் விடச் சிறந்தது.

புதிய
500 கிராம்
மீடியம் பேக் விலை
ரூ. 1.75
மட்டுமே!
(வரிகள் தனி)







பிஜ் மட்டுமே புதிய 500கிராம் மீடியம் பேக்கில் வருகிறது. அதுவும் ரூ. 1.75 விலையில் (வரிகள் தனி). இன்னமும் அதிக சேமிப்புக்காக முதலில் மீண்டும் மீண்டும் பயனுறும் பிஜ் பவுடரை பிளாஸ்டிக் டப்பாவில் வாங்கி வாருங்கள். பின்னர் அதன் காலி டப்பாவில் அதிக சிக்கனமான 5 கி.-வில் அல்லது 2 கி.-வில் பேக்கிலிருந்து பிஜ் நிரப்பிக்கொள்ளுங்கள். இதனால் உங்கள் சமையலறை மற்றும் கண்ணாடிப் பாத்திரங்கள், தரை மற்றும் குளியலறையை சுத்தம் செய்யுங்கள். பின்னர் பாருங்கள், அவை தகதிடும் கண்ணைப் பறிக்கும் பளபளப்புடனே, என்றும் கண்டிராத சேமிப்பை!

**பிஜ் — கோத்ரெஜ் தயாரிப்பு**

சிறப்பாகத் துலக்கிடும் பவுடர்
சிக்கனத்திற்கு இணையற்ற யோசனை!

## ரஃபூ சக்கர்

ஏன், எப்படி என்று தர்க்கக் கேள்விகளைக் கேட்டுக் குட்டை குழப்பினால் கதை 'ரஃபூ சக்கர்'தான். அதாவது மாயமாய் மறைய வேண்டியதுதான். ஆயினும் கடைசிவரை ரசிகர்களை உட்கார வைக்கும் பணியைப் புரிகிறது நகைச்சுவை. கதாநாயகன், வில்லன் எல்லோரையுமே நகைச்சுவைப் பாத்திரமாக்கிப் படத்தை இயக்கிய பெருமை நரேந்தர் பேடியைச் சாரும்.

× × ×

× ×

×



×

× ×

இந்தப் படத்தின் பெரும் பகுதியைக் கதாநாயகன் ரிஷிகபூர் பெண் வேடம் போட்டே நிறைத்து விடுகிறார். பெண்ணைப் பெண் முத்தமிடுவது தவறில்லை என்னும் மாயத்தைச் சிருஷ்டித்துத் தணிக்கையாளர்களின் கண்களைக்கூடக் கட்டிவிடுகிறார். அவருக்குக் காதலியாக வரும் நீதூசிங் கூட இந்தப் படத்தில் பெயர் எடுத்துவிடுகிறார்.

ரிஷி கபூரைக் காட்டிலும் பைண்டல் பெண்ணாகச் சக்கைப் போடு போடுகிறார். ராஜேந்திரநாத் அவருக்குக் காதலனாகத் தம் நடிப்புக்கு உயிர் ஊட்டிக்கொள்கிறார்.

'சண்டையில்லாப் படம் சந்தியிலே' என்னும் புது மொழிக்குப் பயந்து ஸ்டண்ட் பட சண்டையும் நடமிருக்கிறார்கள். காமிரா காஷ்மீர்வரை சென்றிருப்பதோடு குல்ஷன் பாவ்ராவின் இரண்டொரு பாடல்களும் தம் பங்குக்கு மெருகூட்டுகின்றன.

## தில் திவானா

மனம் பித்து என்பதுதான் தலைப்பின் பொருள். மலர்களில் மது உண்ணும் வண்டாக வலம் வரும் ஓர் ஆண் மகனைத் தன் மனத்தால் கட்டிப் போடுகிறாள் ஒருத்தி. மதுப் பித்தம் தெளிந்து அவன் அவளிடம் காதல் பித்தம் கொள்ளுகிறான்.

திரைக் கதை 'ஃபார்முலா'ப்படி அவன் பணக்காரன்; அவள் ஏழை. இருவரையும் விளையாட விட்டுக் கதையை வளர்விடும் வேளையிலே, பல சூழ்ச்சிகளும் பணத்தினபால் பித்துக்கொண்ட மனங்கள் புரிகின்றன. திரைக் கதைக்குத் தேவையான அடி-தடி மோதலுக்கும் வழி வகுக்கின்றன.

இப்படியாக வளரும் அந்தக் கதை 'நூற்றோடு நூற்றொன்று' என்ற கணக்கில் அடிபட்டுப் போகிறது தான் என்றாலும், ஜயாபாதுரிக்கு எத்தகைய நடிப்பும் வரும் என்பதை எடுத்துக் காட்டுவதாக அமைந்திருக்கிறது. கதாநாயகியாக, காமெடியனாக, அடிதடியில் 'சூரி-வீரி'யாக வந்து தம் நடிப்பாற்றலைக் காட்டுகிறார். இப்படி ஒருபுறம் ரசிகர் குழாம் மகிழ்ச்சி கொள்ளலாம். 'இவருக்கு இந்த நடிப்பெல்லாம் எதற்கு?' என்று இன்னொரு புறம் தலையைப் பிய்த்துக் கொள்ளவும் செய்யலாம். ஆனால் ஒன்று. ரண்திர் கபூரைக்கூட நடிகராக உயர்த்த இவரது நடிப்பு துணை புரிந்திருக்கிறதே, அதற்கு என்ன சொல்கிறீர்கள்? —ரா. வீ.



அவர்களுக்குக் கல்யாணமாகி ஐந்தாறு வருடங்கள் ஆகிவிட்டிருக்கும். ஆயினும் அவளும் அவனும் புருஷனும் மனைவியுமாகத் தான் இருக்கிறார்கள். ஊர் உலகத்தில் ஜனங்கள் இப்படித்தான் இருக்கிறார்களா? கல்யாணமான ஒன்பது மாதங்களிலேயே பிள்ளை பெற்று விடுகிறார்களே... அதற்குப் பெயர்தானே கல்யாணம். கல்யாணம் ஏன் செய்துகொள்கிறார்கள்? பிள்ளைகள் பெறுவதற்காகத்தானே... பிள்ளை பெறும் ஆசை இல்லை யென்றால் கல்யாணம் செய்து கொள்ளத் தேவை யில்லை, செய்து கொள்ளவும் கூடாது என்று மகாத்மா காந்தியடிகளே சொல்லி யிருக்கிறார்களே... இதெல்லாம் இந்த ஜன்மங்கள் மண்டையில் ஏறவில்லையே. முழுகாமல் இருக்க வேண்டும் என்று அவளும் ஆசைப்பட மாட்டேன் என்கிறாள், அவனும் மறந்துகூட இந்த ஆசையை அவளுக்கு உண்டாக்க மாட்டேன் என்கிறான்... தாய்—தகப்பன் ஆக வேண்டும் என்கிற நியாயமான உணர்ச்சியே இவர்களுக்கு இல்லையே.... என்ன மரக்கட்டைப் பிறவிகள்...

கேட்டால் ஏதேதோ தர்க்கம் பேசுகிறார்கள். குழந்தைகளைப் பெற்று 'இந்த' நரகத்தில் வாழ்வதைவிடக் குழந்தை பெறாமலே 'அந்த' நரகத்துக்குச் செல்லச் சந்தோஷமாகத் தயார் என்று புருஷனும் பெண்டாட்டியும் ஒரே ஸ்வரத்தில் சொல்கிறார்கள்.

அவர்களுடைய வீட்டுக்குள் நுழைந்து பார்த்தால் ஏதோ காக்கைக் கூடுமாதிரி நெரிசலாக இருக்கிறது. அந்தக் காம்பவுண்டுக்குள் உள்ள அத்தனை வீடுகளும் ஒரே அளவு நீளமும் ஒரே அளவு அகலமும் உடைய அறைகளைக் கொண்டவைதான். மற்ற வீடுகளில் புகுந்தால் அரண்மனை மாதிரி இருக்கும். இவர்களுடைய வீடு மட்டும் தறியும் நெசவுத் தளவாடங்களும் ராட்டையும் நூலும் கட்டையும் கம்பிகளுமாய்த் தாமரைக் கொடிப் புதர் மாதிரி ... ச்சே!

## போட்டிக் கதை - 26

விடிந்ததும் விடியாததுமாய் வெளிச்சம் வந்தவுடனே அவர்கள் வீட்டில் 'டொக்கு டொக்கு டொக்கு' என்று தறி அடிக்கும் சத்தம் கேட்கத் தொடங்கி விடுகிறது. சட்டிப் பானைகளை விளக்கி வைத்துவிட்டுத் தூக்கு போணியை எடுத்துக் கொண்டு போய்த் தெரு மூலையில் அவர்களுக்கென்றே திறந்து வைத்திருக்கும் டீக்கடையில் ஒரு பதினைந்து பைசாவுக்குக் காப்பி வாங்கி வருகிறாள் அவள். தறியில் உட்கார்ந்தபடியே — தறியை நிறுத்தி விட்டுத் தான் — அவன் மனைவி தந்த காப்பியைக் குடிக்கிறான். ''காப்பி குடிக்க இறங்கி வாங்க'' என்று சொல்வதை அவள் மறப்பதில்லை. தறியிலிருந்து இறங்கினால் ரெண்டு அங்குலம் துணி குறைந்து விடும் என்ற வழக்கமான பதிலை அவனும் சொல்லுகிறான். காப்பியைக் குடித்துக் கொண்டே அவர்கள் இரு





தாடா. சுப்ரமணியம்

# ஒரு நாள் கழிகிறது

வரும் இன்றைக்கு என்ன சமைக்கலாம் என்று ஆலோசனை செய்கிறார்கள். கத்தரிக்காயில் தொடங்கி எல்லாக் காய்களையும் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் கடைசியில் எதுவும் சரிப்படாமல் 'நானு கடையில் கேட்டுப் பார்த்து எது மலிவாக இருக்கிறதோ அதை வாங்கிக் கொண்டு வர வேண்டியதுதானே' என்று முடிவாக அவன் சொல்லும்போது, 'இதற்காகப் போய் இவ்வளவு மண்டையை உடைத்துக் கொள்கிறோமே!' என்று கலகலவென்று அவள் சிரிக்கிறாள். அந்தச் சிரிப்புடனேயே அவனும் 'டொக்கு டொக்கு டொக்கு' என்று தறிச் சத்தத்தைக் கலக்கிறான்.

ஒவ்வொரு தடவையும் தறிக் காலை மிதித்து நாடாவை இழுக்கும்போது அவனுக்கு மூச்சு வாங்குகிறது. அதை மறைக்க ஏதோ ஒரு சினிமாப் பாட்டை அவன் முனகிக்கொண்டிருக்கிறான். அதன் காரணமாகவே மூச்சு மேலும் இரைக்கிறது. நூல் கண்டு நாடாவில் தீர்ந்து போகும் பொழுதும் பாவு நூல் ஏதேனும் அறுந்து போகும்பொழுதும் தறியை நிறுத்த நேரிடுகிறது. அப்போது அவனது குரல் சற்று உரக்க ஒலிக்கிறது. சில சமயங்களில் தறியிலிருந்து இறங்கிப் பாவுச் சிக்கல்களை நீக்க அவன் முனைகிறபோது நிசப்தமான காட்டில் வானொலிப் பாட்டு ஒலிப்பது போல் இனிமையாக இருக்கிறது. அந்த இனிமைக்கு ராகம் சேர்த்தாற்போன்று இப்பொழுது வீட்டுக்காரி தார் சுற்றும் சத்தம் கர்ரென்று ஒரே சுருதியில் ஒலிக்கிறது.

இருந்தாற்போல் அவளும் குரல் விட்டுத் தனக்குப் பிடித்ததொரு பாட்டை முனகுகிறாள். வானொலிப் பெட்டியில் முள் சரியாக அமையாமல் ஸ்டேஷனைப் பிடிக்க முடியாத பொழுது இருவேறு பாட்டுக்கள் சேர்ந்து ஒலிப்பது போன்று ஒரே களேபரமாய் இருக்கிறது. சிறிது சிறிதாய் இருவரும் தங்கள் தங்கள் உணர்ச்சிகளை சினிமாப் பாட்டுக்களில் வெளிப்படுத்துகிறார்கள். 'கூடு கட்டி வாழுது மாடப் புறா' என்று அவன் பாடுகிறான். அதை அவள், 'வீடு கட்டி வாழுது மனிதக் கரு' என்று திருப்பிப் பாடுகிறாள். கணவனைக் கலாட்டா செய்து விட்ட திருப்தியும் மகிழ்ச்சியும் பொங்கக் கலகலவென்று அவள் சிரிக்கிறாள். அடுத்து அவனுக்குத் திருப்பிச் சொல்லக் கூட முடியாத-தெரியாத பாட்டைத் தான் பாடிவிட்ட பெருமையில் அவளும் சிரிக்கிறாள்.

பிறகு அவள் தார் சுற்றும் சத்தம் நின்று விடுகிறது. அவனிடம் சில்லறைப் பணம் வாங்கிக் கொண்டு அவள் கடைத் தெருவுக்குப் போய் விடுகிறாள். இப்பொழுது அவன் முழு வேகத்துடன் தறியடிக்கத் தொடங்குகிறான். ஒன்பதரை மணிச் சங்கு ஒலிப்பதற்குள் மூன்று முழம் நெய்து முடிக்க வேண்டும் என்கிற ஒரே லட்சியம் அவனது மனத்தை ஆட்கொள்ளுகிறது. பழையதைச் சாப்பிடத் தறியை விட்டு இறங்கும்போது அந்த லட்சியம் நிறைவேறா விட்டால் அவனுக்குச் சந்தோஷமே இருக்காது.

மூன்றாவது முழக் குறியை நெய்து முடித்து ஜாலியாக அவன் தறியை விட்டு இறங்குவதற்கும் அவள் விறகையும் எருவாட்டிகளையும் கொண்டு வந்து அடுப்படியில் போடுவதற்கும் சரியாக இருக்கிறது. 'பல்லைக் காலையிலேயே விளக்கி விட்டீர்கள், இல்லையா?' என்று சம்பிரதாயத்துக்காகக் கேட்டு விட்டு, 'இதோ வந்து விட்டேன்' என்று சொல்லிக் கொண்டே மீண்டும் வெளியே போய்ச் சொன்னபடியே இரண்டு நிமிடங்களில் அவள் திரும்பி வரும்போது அரிசிப் பையும் காய்கறி, பலசரக்குக் கூடையும் அவள் கைகளில் நிரம்பி இருக்கிறது. 'பாவு அறுத்ததும் கூலி கிடைக்காதா... இவர்கள் பாக்கி எல்லாம் தீர்க்க மாட்டோமா...? இன்றைக்கு அந்தப் பலசரக்குக் கடைக்காரனும் அரிசிக்காரியும் பெரிதாகத்தான் சத்தம் போடுகிறார்கள் ... ஊரிலே யாரும் கடன் வாங்கி ஜீவிக்கிறதில்லையோ ...' என்று முனகிக் கொண்டே அவள் சின்னச் சின்ன டப்பிகளில் தான் கொண்டு வந்த பொருட்களை இட்டு அடைத்து வைக்கிற அழகை அவன் ரசித்துப் பார்க்கிறான்.

பிறகு இரண்டு முழ 'வேட்டி'யைக் கட்டிக் கொண்டு அவன் 'வரதப்பா, வரதப்பா...' என்று கைத்தாளம் போட்டுக் கொண்டே முணுமுணுத்தபடி தரையில் அமர்ந்ததும் முதலில் வட்டமாக இருந்து பின் அறுகோணமாக மாறிவிட்ட 'அலுமினியச் சில்வர்' தட்டில் பழையதை ஊற்றிக் கொண்டு வந்து வைக்கிறாள் அவள். கூடவே அவள் கொடுத்த காலேந்து வெங்காயங்களை அவன் தன் இடது

கையில் வாங்கிக் கொள்கிறான். அந்த வெங்காயங்களை உரித்து வைக்க அவளுக்கு நேரம் எப்பொழுது கிடைக்கிறது என்பது அவனுக்கு இதுவரையில் புரிந்தது கிடையாது. அவன் தறியில் நெய்ய வேண்டுமானால் ராட்டையில் அவள் நார் சுற்றிப் போட்டாக வேண்டும். அதைத் தவிர சமையல் செய்ய வேண்டும், அதற்கான சாமான்களைக் கடைகளில் போய் வாங்கி வர வேண்டும். இவ்வளவு வேலைகளுக்கிடையே கணவனுக்காகப் பழையதுடன் கடித்துக் கொள்ள வெங்காயங்களையும் உரித்து வைக்க அவள் மறப்பதில்லை. தினமும் போலவே 'வெங்காயத்தை எப்போது உரித்தாய்' என்று கேட்டு விட்டுப் பதிலை எதிர்பாராமல் தட்டை எடுத்து அந்த அமுதத்தை உறிஞ்சி உறிஞ்சிக் குடிக்கிறான் அவன்.

அவன் அதைக் குடிக்கிற அழகைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருக்கிறாள் அவள். மிகக் கஷ்டப்படுபவன் போல் — வயிறு முட்டச் சாப்பிட்டவன்போல் இடது கையைத் தரையில் ஊன்றிக் கொண்டு அவன் எழுந்ததும் பானையைக் கழுவித் தட்டில் ஊற்றிக் கொள்கிறாள் அவள். இதற்குள் அவன் தறியடிக்கும் டொக்கு டொக்கு டொக்குச் சத்தம் தொடருகிறது.

ஒரு பருப்போ ஓர் அரிசியோ கீழே சிதறவிடாமல் மிக நாசூக்காக அவள் சமையலைத் தொடங்குகிறாள். காலையில் புருஷனுடன் செய்த சமையல் ஆராய்ச்சியை நினைவு படுத்திக் கொள்கிறாள். ஃபார்முலா அளவுக்கும் அவள் வாங்கி வந்திருந்த பொருள்களின் அளவுக்கும் கணக்குப் போட்டுப் பார்த்தால் இருபதில் ஒரு பங்கு இருக்கிறது. தாளிப்பதற்கு அடுப்பில் சட்டியை வைத்து விட்டு எண்ணெய்ச் சீசாவைத் தலைகீழாகப் பிடித்துக் கொள்கிறாள் அவள். எண்ணெய் முழுதும் காலியாக்கி விட்ட திருப்தியில் அவள், கடுகு, பருப்பு ஆகியவற்றை அதில் போடுகிறாள். அவை உடனடியாகக் கருகிப் போகின்றன. ஒரு தம்ளர் நீரை அதில் ஊற்றிய அவள் அதை ரசத்துடன் கலக்கிறாள். 'பரவாயில்லை ... இன்று சாயந்திரம் தான் பாவு அறுக்கப் போகிறாரே, பணம் கிடைக்குமே ... எண்ணெய் என்ன, நெய்யே வாங்கி வைத்துக் கொள்ளலாம்...' என்று கற்பனையை ஓடவிட்டபடி சமையலை முடித்து விட்டு எழுந்து வந்து மீண்டும் ராட்டையில் அமர்கிறாள் அவள்.

அவள் நூல் சுற்றும் சத்தமும் அவன் தறியடிக்கும் சத்தமும் மட்டுமே இப்பொழுது இணைந்து ஒலித்துக் கொண்டிருக்கின்றன. புருஷனும் பெண்டாட்டியும் அதீதமான சிந்தனைகளில் ஆழ்ந்தபடி தத்தம் வேலையில் ஆழ்ந்து விடுகிறார்கள். அந்த நேரத்தில் வீட்டுக்குச் சொந்தக்காரர் வாடகை கேட்க வருகிறார். மாத வாடகை நாற்பத்தெட்டு ரூபாய். குடி வரும்பொழுது ஐந்நூறு ரூபாய் கடன் வாங்கி அட்வான்ஸ் கொடுத்திருக்கிறார்கள் அவர்கள். அதற்கு வட்டி மாதத்துக்கு இருபது ரூபாய். முந்திய பாவு அறுத்தபோது அதைக் கொடுத்தாகி விட்டது. 'இன்றைக்குப் பாவு அறுப்பேன். கூலிப் பணம் கிடைத்தவுடன் வாடகையைக் கொடுத்து விடுகிறேன்' என்று வீட்டுக்காரரிடம் அவன் சொல்லியிருந்தான்.

அவர்கள் சொல்லாமலேயே தரையில் உட்கார்ந்து கொள்கிறார் அவர். 'என்னப்பா வாடகைப் பணம் தருகிறாயா?' என்று கேட்டுக் கொண்டே அவர் வெற்றிலைப் பெட்டியைத் திறந்து மிகச் சாவதானமாகத் தாம்பூலம் தரிக்கிறார். இரண்டு மூன்று முறை அவர் எழுந்து எழுந்து வெளியே சென்று எச்சில் துப்பிவிட்டு வருகிற வரைக்கும் அவளும் அவனும் பதில் சொல்லத் தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு தடவையும் எச்சில் துப்புவதற்காக அவர் வெளியே செல்லும் போதும் புருஷனும் பெண்டாட்டியும் தங்களுக்குள்ளே கேட்கும் படியாக ஏதோ ஆலோசனை செய்து கொள்கிறார்கள்.

அவர்களுக்குள் ஒரு முடிவு செய்து கொள்ளட்டும் என்று அவரும் ஒரு முறைக்கு மூன்று முறையாக எச்சில் துப்பும் பாவனையில் வெளியே செல்கிறார். சொதசொதவென்று பாழ்பட்டுக் கிடக்கும் கிணற்றடியைப் பார்வையிட்டு, 'மண் விற்கிற விலையில் இதையெல்லாம் எப்படித்தான் மராமத்து பார்ப்பதென்று தெரியவில்லையே' என்று தமக்குத் தாமே கேட்டுக் கொள்கிறார். வாடகையை இருபத்தைந்து சதவிகிதம் ஏற்றும்பொழுது எல்லாப் பழுதுகளையும் சரிபார்த்துத் தருகிறேன் என்றும் மின்சார விளக்கும் போட்டுத் தருகிறேன் என்றும் வாக்குறுதிகள் கொடுத்தது அவருக்கு ஞாபகம் வரமாட்டேனென்கிறது. ''ஆறு மாதங்களுக்கு ஐம்பது ரூபாய் வரி ஏறிவிட்டது. வெறும் குப்பைகளையெல்லாம் காசுக்கு விற்க ஆரம்பித்து விட்டார்கள். வேலையை இப்பொழுதே ஆரம்பித்து விடலாம். ஆனால் சிமிண்டு கிடைக்க மாட்டேனென்கிறதே'' என்று அவர் அங்கலாய்க்கும்போது மிகவும் பரிதாபமாக இருக்கிறது.

இப்படி மற்றக் குடித்தனக்காரர்களையெல்லாம் விசாரித்து விட்டுக் கடைசியில் இவனுடைய வீட்டில் வந்து உட்கார்ந்திருக்கிறார் அவர்.

''இன்றைக்குத்தானய்யா பாவு அறுக்கப் போகிறேன். பணம் சாயங்காலம் கிடைக்கும். பாதி வாடகையை எப்படியும் தந்து விடுகிறேன். அடுத்த பாவு அறுத்ததும் மீதிப் பாதியைத் தந்து விடுகிறேன்'' என்று மிகக் கஷ்டப்பட்டுச் சொல்கிறான் அவன். சிறிது நேரத்துக்கு முன்னால் கணீரென்று குரல் விட்டுப் பாடியவனா இவன் என்று சந்தேகமே வருகிறது.

'நீ என்னப்பா, சல்லிசாகச் சொல்லி விட்டாய். வரிக்காரன் வந்து என்னவெல்லாம் ஏசுகிறான் தெரியுமா? நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போல் தோன்றும்' என்று விசனிக்கிறார் அவர். ''ஒரு விஷயத்திலும் நல்லவிதமாய் நடக்கவில்லை. அங்கே அதிகாரி வருவதற்கு முன்னே வயலில் கதிரை அறுக்கக் கூடாதென்று உத்தரவு வந்து விட்டது. கழனியிலே நெல் அழுகிக் கொண்டிருக்கிறது. இந்த மகசூலில் வீட்டு உபயோகத்துக்காவது நெல் கிடைக்கும் என்று எண்ணி ஆகாயக் கோட்டை கட்டியிருந்தேன். அதிகாரி வந்து அறுவடை நடப்பதற்குள் எத்தனை கோட்டை மக்கிப் போகிறதோ. ஆண்டவனே! இந்த நஷ்டத்தையெல்லாம்

உம்மிடியார்ஸ் ஜுவல்லரீஸ்

# ஜொலிக்கும் எங்கள் கலைப்படைப்பு!

மாசற்ற வைரங்கள்,
கண்கவரும்
நவரத்தினங்கள்
நிகரற்ற கலைப்படைப்பு
பொருந்திய தங்க
நகைகள்.
காலத்துக்கேற்ற
அமைப்புகளுடன்
தயாரிக்கிறோம்.
வருகை தந்து
தங்களுக்கேற்றதைத்
தேர்ந்தெடுங்கள்.



VS

## உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸ்

40, பாண்டி பஜார், மாம்பலம்,
சென்னை-600017 போன்: 442500

- ஞாயிற்றுக்கிழமை கடை திறந்திருக்கும்.
- செவ்வாய்க்கிழமை விடுமுறை

ADWAVE/VSJ/260

அழகு முகம்
ஒவ்வொன்றுக்குள்ளும்
அழகு ரகசியம்
ஒன்று
ஒளிந்திருக்கிறது.




உங்கள்
நோக்கம்
அழகாகத் தோற்ற
மளிப்பது. உங்கள்
சருமத்தை
அதற்கேற்ப
வைத்திருப்பது
க்ருக்ஸ் லாக்டோ-
காலமைன்.

க்ருக்ஸ்
லாக்டோ-காலமைன்

டூபார்-இண்டர்நேஷனல் லிட்.,
தபால் பெட்டி எண் 6582,
பம்பாய் 400 018

அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

எப்படி நான் ஈடு கட்டுவது? இதையெல்லாம் உனக்கு எப்படிப் புரிய வைப்பேன்?

''இந்த மாதிரி கஷ்ட நஷ்டங்களெல்லாம் உனக்குப் புரியுமா? ரொம்பவும் சல்லிசாகச் சொல்லி முடிச்சுட்டே, பாதி வாடகையைத் தருகிறேன் என்று.''

அவர் எழுந்திருக்கிறார். அவருடைய மனத்தை நோக வைத்து விட்டோமே யென்று புருஷனுக்கும் பெண்டாட்டிக்கும் வேதனையாய் இருக்கிறது.

''வாடகைப் பணம் முழுவதையும் குடுத்துடலாமுங்க...'' என்று புருஷனைப் பார்த்துச் சொல்கிறாள் அவள். அவன் வீட்டுக்காரரைப் பார்க்கிறான்.

''இதுதான் மனிதனுடைய லட்சணம்'' என்று முகமலர்ந்து கூறிவிட்டு அவர் போகிறார். இருட்டுவதற்குள்ளாகப் பாவு அறுத்து முடிக்க வேண்டுமே என்ற ஒரே சிந்தனை அவனை அழுத்துகிறது. உடனே தறியில் ஏறி மடமடவென்று அடிக்கிறான்.

''மணி ரெண்டாகி விட்டது போலிருக்கிறது. சாப்பிட இறங்கி வாங்க'' என்கிறாள் அவள். குரலில் பெருத்த கவலை தோய்ந்திருக்கிறது. இருவரும் ஒன்றும் பேசாமலேயே சாப்பாட்டை முடிக்கிறார்கள். பிறகு மீண்டும் அவரவர் வேலைகளில் ஈடுபட்டு விடுகிறார்கள்.

எப்படியோ ஆறரை மணிக்குப் பாவு அறுத்து விட்டு அவன் முதலாளி வீட்டுக்குப் போய் விடுகிறான். வாசற் கதவைப் பூட்டிவிட்டுப் பக்கத்து வீட்டுக்காரியுடன் பேச்சுக் கொடுக்க வருகிறாள் அவள். ஏற்கனவே வேறு சில பெண்களும் அந்த வீட்டுக்காரியுடன் பேசிக் கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது அங்கே ஒரு விவாத அரங்கமே நடந்து கொண்டிருக்கிறது.

''இப்பொழுதெல்லாம் மற்றச் சேலைகளைக் காட்டிலும் கைத்தறிச் சேலைகள் மலிவாகவும் தரமாகவும் இருக்கின்றன. கைத்தறி மாதிரி டிசைன்கள் போட மில்லிலே ஒருபோதும் முடியாது'' என்று அந்தப் பக்கத்து வீட்டுக்காரி சொல்வதை கேட்டுக் கொண்டே உட்கார்ந்திருந்த அவள் குழுமியிருந்த எல்லாப் பெண்களையும் கவனிக்கிறாள். ஒரு கைத்தறிச் சேலையையும் காணாமல் அவள் கண்கள் ஏங்கிப் போகின்றன. ஆனாலும் 'கைத்தறிச் சேலைகளின் மீது பெண்களுக்கு ஒரு நல்லெண்ணமும் ஆசையும் வந்து விட்டன. இனிக் கைத்தறிச் சேலைகளுக்கு மிகுந்த கிராக்கி ஏற்படும்... எவ்வளவு வேண்டுமானாலும் நெய்யலாம். கைநிறைய வருமானம் பெறலாம்' என்று அவள் உள்ளம் குதூகலிக்கிறது.

வீட்டுக்குள்ளே போய்க் கணவனிடம் 'ஒன்பதரை மணிக்கு மேலாகிறது. இவ்வளவு நேரமா?' என்று கேட்கிறாள். அவன் ஒன்றும் பேசாமல் சட்டைப் பையிலிருந்து பணத்தை எடுத்து அவளிடம் தருகிறான். சட்டையைக் கழற்றிச் சுவரிலிருந்த ஆணியில் தொங்க விடுகிறான். அவள் பணத்தைச் சரியாக எண்ணிப் பார்க்கிறாள். ஆனால் இதற்குள் வீட்டுக்காரர் வாசலிலிருந்து குரல் கொடுக்கிறார். நாற்பத்தெட்டு ரூபாயை எண்ணி அவர்கையில் கொடுத்துவிடுகிறார்கள். பிறகு மீச்சப் பணத்தை யார் யாருக்கு எவ்வளவு எவ்வளவு தருவது என்று ஆலோசித்துப் பிரித்து வைக்கிறார்கள். இன்னும் எத்தனையோ பேருக்கு எவ்வளவோ பணம் தர வேண்டியிருக்கிறது. எல்லாமே கழுத்தை நெரித்துக் கொண்டிருக்கிற கடன்கள்தாம். அந்த முப்பத்துச் சில்லறை ரூபாயைச் சிம்னி விளக்கின் ஒளியில் சுற்றிலும் ஏழெட்டுக் கூறுகளாகப் பிரித்து வைத்தது அப்படியே இருக்க இருவரும் முழங்கால்களைக் கைகளால் கட்டிக் கொண்டு எதிரும் புதிருமாய் உட்கார்ந்திருக்கிறார்கள். சில நிமிடங்களுக்கொரு முறை ஒருவரையொருவர் ஏறிட்டுப் பார்த்துக் கொள்கிறார்கள்.

''முதலில் வருபவர்களுக்கு ஐந்து ஐந்து ரூபாயாகக் கொடுத்துக் கொண்டே வா. பிறகு பார்த்துக் கொள்ளலாம். அடுத்த பாவு சீக்கிரம் அறுத்து விடுகிறேன்...'' என்று பணத்தைத் திரட்டித் தருகிறான்.

தட்டில் சாதத்தைப் போட்டுக் கொடுத்த படியே அவள் இலேசாக உதடுகளைப் பிரித்துப் புன்னகை செய்கிறாள். அடுத்த பாவு அறுக்கும்பொழுதும் இதே உரையாடல் தான் நடக்கும் என்று அவளுக்குத் தெரியும். சொற்களும் செயல்களும் எல்லாம் வெறும் நடிப்பும் பாசாங்கும் தான். இருந்த போதிலும் அவர்கள் அதை வழக்கமாகச் செய்து வருகிறார்கள். அவள் புன்னகையை மனக்கண் முன்னே நிறுத்திக் கொண்டே அவன் சாப்பிட்டு விட்டுப் போய்ப் படுத்துக் கொள்கிறான். அவளும் பாத்திரங்களைக் கழுவி வைத்துவிட்டுப் புருஷனுடைய கால்களைப் பிடித்து விடுகிறாள். சிறிது நேரத்தில் அந்தக் காலடிகளிலேயே தலையை வைத்துத் தூங்கி விடுகிறாள் அவள். ஆனால் அவனுடைய கண்கள் தூங்காமல் விடியும் வரையிலும் நீரைச் சிந்திக் கொண்டே யிருக்கின்றன. அவர்களுடைய ஒவ்வொரு நாளும் இப்படித் தான் கழிந்து போய்க் கொண்டிருக்கிறது. அவர்களுக்குக் கல்யாணமாகி ஐந்தாறு வருடங்கள் ஆகி விட்டிருக்கும். ஆயினும் அவனும் அவளும் இன்னும் புருஷனும் பெண்டாட்டியுமாய்த்தான் இருக்கிறார்கள்.



பிரான்காய் என்னும் பிரஞ்சு அரசரிடம் திரிபோலே என்ற விதூஷகர் இருந்தார். இருவரும் ஒருவரை ஒருவர், ''அத்தான்!'' என்றுதான் அழைத்துக் கொள்வார்கள்.

ஒரு சமயம், இத்தாலி நாட்டைத் தாக்குவதற்காக அந்த நாட்டுக்குள் எப்படிப் பிரவேசிப்பது என்பது பற்றி மன்னர் தம் மந்திரிகளோடு ஆலோசித்துக் கொண்டிருந்தார்.

அப்பொழுது, ''அத்தான்!'' என்று அழைத்தார் திரிபோலே!

''என்ன?'' என்று கேட்டார் மன்னர்.

''நீங்கள் இத்தாலியில் தங்கப் போறீர்களா?''

''இல்லே.''

''அப்படியானால் இத்தாலிக்குள் நுழைவது எப்படி என்று ஆலோசிப்பதைவிட, இத்தாலியை விட்டு வெளியேறுவது எப்படி என்பது பற்றி ஆலோசனை செய்வதுதான் நல்லது'' என்றார் திரிபோலே!

உதவி: நாடோடி

# உங்களுக்காக பிலிப்ஸ் வழங்கும் இந்த அபூர்வமான மியூஸிக் ஸிஸ்டம் பல அரிய சிறப்புகள் கொண்டது...







CBM 3464 TH

## மெயின்ஸ்- பாட்டரி ஸிஸ்டம் ஜீஎ:ப் 533



## இந்த பிலிப்ஸ் ஜீஎ:ப் 533 செய்து காட்டுவதை வேறெந்த ரெகார்டு பிளேயரும் செய்யமுடியாது.

இதில் மோனோ இசைத்தட்டு ஒலி பிரமாதமாக இருக்கும்; ஸ்டீரியோ கூடத்தான். இது ஸ்டீரியோ கார்ட்ரிஜ் மற்றும் அவுட்புட் வசதி கொண்டது. இதை உங்கள் ரேடியோவுடன் இணைத்துப் பாருங்கள். என்ன ஆச்சரியம்! இதோ ஸ்டீரியோ தயார்.



ஸ்டீரியோவாகவும் மாற்றிக்கொள்ளலாம்

இதை நேரடியாக டேப்-ரெகார்டிங் செய்யவும், பதிவு செய்ததைத் திருப்பிக் கேட்கவும் பயன்படுத்தலாம். மோனோ, ஸ்டீரியோ, இரண்டுமே!

மெயின்ஸில் இயக்குங்கள்; அல்லது பாட்டரிகளில். மின்விசை நின்றுவிட்டால், இது தானாகவே பாட்டரிகளில் இயங்குகிறது.



இது எப்பொழுதும் ஒரு நிலையான வேகத்தில் இயங்குகிறது என்பதை கம்பலாம். இதை உறுதிப்படுத்துகிறது விசேஷ 'எலெக்ட்ரானிக் ஸ்பீட் 'கவர்னர்'

இசைத்தட்டின் ஒலி முடிந்ததும், இது தானாகவே நின்றுவிடுகிறது. இது மட்டுமா? இதில் வால்யூம் மற்றும் தொனிக் கட்டுப்பாடுகளும், வெவ்வேறு 3-ஸ்பீட்களும் உள்ளன.

இதை வீட்டிலும், வெளியிலும் இயக்கலாம். (இன்பமாகப் பொழுது போக்க, வசதியாக வெளியில் எடுத்துச் செல்லலாம் என்பதை எண்ணிப் பாருங்கள்!)

இதன் அழகிய தோற்றமே உங்களைக் கவர்ந்துவிடுமே! மரம், ஸ்டெயின்லெஸ்டீல் மற்றும் அலங்கார அலுமினியத்தில் அழகான அமைப்பு கொண்டது.

**இத்தனை சிறப்புகளும் கொண்ட பிலிப்ஸ் மெயின்ஸ்-பாட்டரி ஸிஸ்டம் ஜீஎ:ப் 533-ஐ, இவ்வளவு குறைந்த விலையில், பிலிப்ஸ் தொழில் நுட்பத் திறன் மட்டுமே உங்களுக்கு வழங்க முடியும்.**

இன்றே உங்கள் பிலிப்ஸ் வியாபாரியைக் காண்க.

# பிலிப்ஸ்

■ தண்ணீர் கொண்டு வரும் பெரிய குழாய்கள்.

# தரிசுநிலம் தங்கவயலாகிறது!

தரிசு நிலத்தைத் தங்க நிலமாக மாற்றிய பெருமை மோகனூர் பஞ்சாயத்து யூனியன் தலைவரான திரு. எஸ். எம். கிருஷ்ணனுக்கு உண்டு.

சேலத்திலுள்ள ஒருவந்தூர் கிராமம் வானம் பார்த்த சீமை. மழை பெய்தால் விளைச்சல். இல்லாத போனால் மன உளைச்சல். இதற்கு ஒரு விமோசனம் வேண்டுமே என எண்ணுகையில் ஏற்பட்டது தான் ஒருவந்தூர் கூட்டுறவு விவசாயத் திட்டம்.

■ நீர் பாய்ச்சுதல்.



திரு எஸ். எம். கிருஷ்ணன் அவர்கள் அங்கு உள்ள மக்களையெல்லாம் இணைத்து அங்கத்தினர்களாக்கி இந்தக் கூட்டுறவு சொசைட்டியை ஏற்படுத்தினர். 484 பேர் இதில் அங்கத்தினர்களானார்கள். நிரம்ப நிலமுடையவர்கள், குறைந்த நிலமுடையவர்கள் எல்லாரும் சேர்ந்தார்கள்.

காவேரி நீரைப் பெரிய பைப்புகளின் மூலம் பயிராகும் நிலங்களுக்குக் கொண்டு வந்து பாய்ச்சுதல் என்பதே திட்டம். சுமார் 432 ஏக்கர் தரிசு நிலத்தைப் பயிராக்குவதற்கு ரூ. 16,27,100 செலவாகும் எனத் தெரிந்தது. 484 அங்கத்தினர்களின் பங்குத்தொகையாக ரூ. 15,820 சேர்ந்தது.

அரசாங்கம் இவர்கள் குழாய் மூலம் காவேரி நீரைக் கொண்டு வருவதற்கு ஒப்புதல் தந்து உதவியது. மேலும், இந்தக் கூட்டுறவு சங்கம் கனரா பாங்கியில் கடன் பெறவும் சம்மதம் தந்தது.

கனரா வங்கி ஓர் ஏக்கருக்கு ரூ. 2630 என 432 ஏக்கருக்குப் பணம் தரச் சம்மதித்து சுமார் 11.50 லக்ஷம் ரூபாய்களும் தந்தது.

அவ்வளவுதான்: வேலைகள் மடமடவென்று தொடங்கின. துரிதமாகச் செயல்படக் கூடிய யந்திரங்களும் தண்ணீரை வீணாகாமல் கொண்டு வரப் பெரிய குழாய்களும் பொருத்தப் பட்டன. கூட்டுறவு

■ எஸ். எம். கிருஷ்ணன்







## உங்க வீட்டுக் கல்யாணம்

ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் செய்து வைக்கலாம் என்பது பழமொழி. ஆனால் ஆயிரம் அசட்டுத்தனங்களைப் பண்ணிச் சித்ர மகாலின் தயாரிப்பான "உங்க வீட்டுக் கல்யாணம்" நடத்தி வைக்கப்படுகிறது.

சிரிப்பு என்று வரும்போது ஒருசில நல்ல ஜோக்ஸ்களுடன் அசட்டுத்தனங்களையும், கோணங்கித்தனங்களையும் சேர்த்துப் பார்த்து ஒரே சிரிப்பாக எல்லாரும் சிரித்துவிடுகிறார்கள்.

யாரோ பிச்சைக்காரனுவாம்! ஒரு முகமூடித் திருடி. போலீசுக்கு 'டிமிக்கி' கொடுத்துக் கொண்டிருந்தாளாம்! ஒரு நாள் அவள் பாத் ரூமில் குளித்துக் கொண்டிருந்தபோது கழற்றிப் போட்டிருந்த அவளது உடைகளை மேல் ஜன்னல் வழியாக ஒரு கோலின் உதவியால் வெளியேற்றி, அவளை வெளியே வர முடியாமல் திணறச் செய்து போலீசில் ஒப்படைத்து விடுகிறார்கள் சில புத்திசாலிகள்! என்ன கற்பனையோ, என்ன கதையோ போங்கள்!

முகமூடித் திருடியாக நீண்ட நாட்களுக்குப் பிறகு ஜோதிலட்சுமியைப் பார்க்கிறோம். பார்க்காமலே இருந்திருக்கலாம் என்று மனதுக்குத் தோன்றும்.

தங்கவேலு! அடே, அப்பா! என்ன போடு போட்டிருக்கிறார், மனுஷன்!

தேங்காய் சீனிவாசன் எல்லோரையும் மறுபடித் திக்குமுக்காட வைக்கிறார். 'சோ', மனோரமா இருவரும் "உங்க வீட்டுக் கல்யாண"த்தில் படைக்கும் நகைச்சுவை விருந்து விசேஷ விருந்துதான்!

கதாநாயகி சுபாவுக்குக் கள்ளத்தனமாகக் காதலனைச் சந்திப்பதைத் தவிர வேறு வேலையில்லை. கோபுவினுடைய கதை, வசனம் கே. கிருஷ்ணமூர்த்தியின் டைரக்ஷனில் பொழுதுபோக்குப் படமாக உருவாகியுள்ளது.

—காந்தன்



சங்கம் வேலையைத் தீவிரமாகவும், முழு மூச்சுடனும் செய்தது.

"தண்ணீரைக் கொண்டு வருவதில் ஆவல் காட்டுவதைப் போல் அதில் ஒரு துளியும் வீணாகாமல் பாதுகாப்பதிலும் நாங்கள் அக்கறை செலுத்துகிறோம். சாதாரணமாக ஒரு கன அடி தண்ணீரில் 25 ஏக்கர் தான் பாய்ச்சுவார்கள். ஆனால் நாங்கள் அதே அளவு தண்ணீரை 100 ஏக்கருக்குப் பாய்ச்சுகிறோம். தண்ணீர் சிறிதும் சேதம் செய்யாததால் இது முடிகிறது" எனப் பெருமிதமாகவே கூறுகிறார் இந்தத் திட்டத்தை உருவாக்கிய திரு. எஸ். எம். கிருஷ்ணன்.

இந்தத் திட்ட வேலைகள் முடிவடைந்து சாகுபடியும் செய்ய ஆரம்பித்தார்கள். வானம் பார்த்த சீமை, விளைச்சல் உறுதியில்லை என்ற பேச்சு மறைந்து விவசாயிகள் மூன்று போகம் சாகுபடி செய்து [illegible]. நெல், கரும்பு, நிலக்கடலை [illegible] யாவும் அந்த நிலங்களில் பயிரிடப்படுகிறது எனக் குறிப்பிட்டார், மோகனூர் [illegible] முன்னேற்ற அதிகாரி திரு. க. ராமச்சந்திரன்.

விவசாயிகளுக்கு வங்கி கொடுத்திருக்கும் கடனை இந்த வருடங்களில் திருப்பி விட வேண்டும் என்பது ஒப்பந்தம். அநேகர் நல்ல விளைச்சல் காரணமாகத் திட்டமிட்டதற்கு அதிகமாகவே திருப்பித் தருகிறார்கள். ஓர் ஏக்கர் சுமார் மூவாயிரம் ரூபாய் என மதிப்பிடப்பட்ட இந்த நிலங்கள் இப்பொழுது ரூ. 35,000, ரூ. 40,000 என மதிப்பு போடப்படுகிறது. இதன் காரணமாக விவசாயிகளின் வாழ்க்கைத் தரமே உயர்ந்திருக்கிறது. ஓர் ஏக்கரில் வருஷத்தில் சராசரி ஆறு டன் அரிசி கிடைக்கிறதாம்.

பம்பு பொருத்தி, நிலத்தின் அடியிலிருந்து நீரெடுத்துச் சாகுபடி செய்ய முற்பட்டால் இன்னும் பல ஏக்கர் நிலங்களைச் சுலபமாகச் சாகுபடி செய்யலாம் என்றும் கிருஷ்ணன் கூறினார். 'அரசாங்கத்தினிடமிருந்து ஸ்பிரிங்க்ளர் (Sprinkler) முறையில் நீர் பாய்ச்சவும் அனுமதி பெற்று விட்டோம். இதனால் இதே அளவு நீரில் 432 ஏக்கருக்குப் பதில் 864 ஏக்கர் பயிரிடலாம்' என்றும் குறிப்பிட்டார்.

உண்மையிலேயே பசுமைப் புரட்சி செய்திருக்கும் திரு கிருஷ்ணன், தானியங்களை எடுத்துச் செல்லும் வண்டிக்கு டயர் பயன்படுத்துகிறார். இது அதிக தானியங்களை எடுத்துச் செல்லவும், மாட்டுக்குச் சிரமத்தைக் குறைக்கவும் சாலைகள் வீணாகாமல் இருக்கவும் உதவுகிறது.

காங்கிரஸ் அங்கத்தினராகவும், மோகனூர் பஞ்சாயத்து யூனியன் தலைவராகவும், ஒருவந்தூர் கூட்டுறவு சங்கத் தலைவராகவும் இருக்கும் திரு எஸ். எம். கிருஷ்ணனின் இந்தப் பசுமைப் புரட்சி தரிசு நிலத்தைத் தங்க வயலாக மாற்றுவதல்லவா?

— குபி

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

